

# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.



மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.



உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## முதியோர் சேவை பெரியது!

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

### Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700,
2475 7777 2475 5799,
e-mail:svhome@vsnl.net






# கல்கி

2.5.2004


செம்பியனுக்கு இந்த வாரம் லீவு!




✉ கடந்த ஞாயிறு சென்னைத் தொலைக் காட்சியில் 'நேசம் புதுசு' திரைப்படத்தில், வடிவேலுவின் காமெடியைப் பார்த்து விட்டதனால், மாயா கிருஷ்ணமூர்த்தியின் 'தலைவரா கொக்கா' சிறுகதையின் கற்பனையைப் புதுசு என்று ரசிக்க இயலவில்லை!
நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ 'நன்னடத்தையா? கிலோ என்ன விலை?' தலையங்கம் கண்டேன். 1984 தேர்தலின்போது, நான் சேலம் மாவட்டம் பனமரத்துப்பட்டியில் பணி நிமித்தம் ஒரு மாத காலம் தங்கியிருந்தேன். கடைவீதி முழுக்க ஒரே செட்மைக் சிஸ்டம். அதில் ஒரு மணி நேரம் தி.மு.க - ஜனதா கூட்டணி பிரசாரப் பாடல்கள். அடுத்த ஒரு மணி நேரம் அ.தி.மு.க - காங். கூட்டணி பிரசாரப் பாடல்கள். தொண்டர்கள் எதிர் எதிர் அணியில் வேலை செய்வார்கள். தேர்தல் முடிந்ததும் தோளில் கை போட்டுக் கொண்டு போய் விடுவார்கள். இப்படிப்பட்ட ஆரோக்கியமான அணுகுமுறை உருவானால் ஜனநாயகம் வலுப்பெறும்.
கீழ்நத்தம், வி. கல்யாணி.

# உஸ்... அப்பாடா!

✉ 'ரோஜா தீவிர அரசியலில் குதித்தால், இன்னமும் பல அரசியல் முட்களைச் சந்திக்க வேண்டி வரும்' என்று எழுதியிருந்தீர்கள். தீவிர அரசியலில் குதிப்பதற்கு முன்பேயே 'சீட்' கொடுத்ததினால்தான், கலாட்டா முள்ளைச் சந்தித்திருக்கிறார் ரோஜா.
மதுரை, என். பாலகிருஷ்ணன்.

✉ 'இளைக்கலாம் அழகாக' என்று கூறி மினி பழமுதிர்ச்சோலை வழங்கி, வெயிலின் தாக்கத்தைக் குறைத்து விட்டீர்களே! உஸ்... அப்பாடா! தாங்க்ஸ்!
ஈரோடு - 10, பன்னிபாளையம் ரஞ்சனிப்பிரியன்

✉ 'இளைக்கலாம் அழகாக' தலைப்புக்குப் பொருத்தமாக குண்டூஸ் நட்சத்திரங்களின் படங்களைப் போட்டது, 'மினி கல்கி'யின் வெயிட்டை மேலும் ஏற்றிவிட்டது.
வேலூர் - 6, வே.நகதிர்வேல்

✉ சுதாமூர்த்தியின் கட்டுரையில் ரஷ்யாவில் 'போர் நினைவுச் சின்னங்களுக்குப் போய் மணமக்கள் வணங்கியே ஆக வேண்டும்' - என்ற பண்பு பிரமிப்பைத் தந்தது.
கே.கே. புதூர், எஸ்.ஆர். சீதாலக்ஷ்மி

**ரூ.100 பரிசு பெறும் சிறப்புக் கடிதம்!**

✉ 11.4.2004 தேதியிட்ட 'கல்கி'யில் 'சாக்கடைத் தண்ணீரில்

✉ என்னுடைய 'ஆகட்டும் பார்க்கலாம்' என்னும் பெருந்தலைவர் காமராஜ் பற்றிய நூல் வெளியீட்டு விழா குறித்து, கல்கி இதழில் செய்தி கண்டேன். அதிலே இடம் பெற்ற சில தவறுகளைச் சுட்டிக் காட்டித் தெளிவு படுத்த விரும்புகிறேன்.

காமராஜரை விருதுநகரில் தோற்கடித்தது தி.மு.க, காங்கிரஸ் கூட்டணிதான், என்று தா. பாண்டியன் பேசியதாக, தங்கள் செய்திக் குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. தா. பாண்டியன் அவ்வாறு பேசவில்லை.

சாகுபடி!' என்ற தலைப்பில், ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசுவின் கட்டுரையைப் படித்து துணுக்குற்றேன். நகரத்து சாக்கடை நீரில் உள்ள தீவிர உலோக நச்சுகள் பற்றிய தகவல்களை, மாநில விவசாயக் கல்லூரிகளின் விரிவாக்க மையங்கள், விவசாயிகளிடம் பரவலாக எடுத்துச் சொல்லத் தவறி விட்டன. இதன் காரணமாகவே சுத்திகரிக்கப்படாத சாக்கடை நீரை, வேறு வழியில்லாமல் விவசாயிகள் பயன்படுத்தி, பயிரிட்டு நல்ல லாபமடைந்தும் வருகிறார்கள்.




விவசாயிகள் தங்கள் பயிர்களைக் காக்க முனைவது நியாயம்தான். ஆனால் அதே சமயம், அவர்கள் விளைத்த பயிர்கள்/ காய்கறிகள், மனித உயிர்களுக்குக் கேடு விளைவிப்பதற்கான காரணங்களை அலட்சியம் செய்யக்கூடாது. நகராட்சிகள் சாக்கடை நீரைச் சுத்திகரித்து, நச்சுகள் நீக்கப்பட்ட நீரை தேவைப்படும் விவசாயிகளுக்கு விற்றுப் பயனடையலாமே, செய்வார்களா?

பெங்களூர் - 93, என்.கே. சூரியநாராயணன்

---

காமராஜர் காங்கிரஸ் கட்சியின் சார்பில் தானே விருதுநகரில் போட்டியிட்டார். அவரை எதிர்த்துத்தான் தி.மு.க போட்டியிட்டது.

மேலும், கலைஞர் பேசும்போது நாகர்கோவிலில் நாடாளுமன்றத் தேர்தலில், காமராஜரை தி.மு.க ஆதரித்ததாகப் பேசியதாகவும் எழுதப்பட்டுள்ளது. காமராஜரை, குடியாத்தம் தொகுதியில் நடைபெற்ற இடைத் தேர்தலில்தான் தி.மு.க ஆதரித்தது, என்று கலைஞர் பேசினாரே தவிர, நாகர்கோவிலில் தி.மு.க ஆதரித்ததாகப் பேசவே இல்லை. மேலும் குடியாத்தம் இடைத்தேர்தலில் காமராஜர் வெற்றி பெற்று, தமது முதலமைச்சர் பதவியைத் தக்க வைத்துக் கொண்டார்.

சென்னை - 18, வீரபாண்டியன்,
அரசியல் விமர்சகர்,
சன்.டீ.வி


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

“தமிழ்நாட்டில் ஜெயலலிதா எதிர்ப்பு அலை ஓரளவு இருந்தாலும், வாஜ்பாய் செல்வாக்குக் காரணமாக, அதிமுக - பாஜக கூட்டணியின் வெற்றி வாய்ப்புகள் பலப்படும் அல்லவா...?”

**வைகோ :** வாஜ்பாய்க்கு அகில இந்திய அளவிலேயே செல்வாக்கு இருக்கிறது. இன்னமும் சொல்லப் போனால் என்னைக் கவர்ந்த உயர்ந்த தலைவர்களில், அவருக்கு முதலிடம் உண்டு. மிக நெருங்கிய பழக்கம் அவருடன். அவரே கூட ஒருமுறை பீகாரில் பத்திரிகையாளர்களிடம், 'வைகோ, என் மகன் போல' என்று சொல்லியிருக்கிறார். அவருக்கென்று ஒரு செல்வாக்கு இருக்கிறது. ஆனால் தமிழ்நாட்டில் அதைத் தாண்டி, மதநல்லிணக்கத்துக்கு விரோதமாக, மதவெறியைக் கொண்டு வந்து இங்கு நிலைநாட்டும் முயற்சிகளில் பா.ஜ.க., சங்கக் குடும்பம், சிங்கால், தொகாடியா போன்றோர் ஈடுபட்ட காரணத்தால், பா.ஜ.கவால் ஆபத்து வருமென்று உணரப்பட்டு, அதற்கு எதிர்ப்புணர்வு அதிகமாகி விட்டது. இதனால் தமிழ்நாட்டில் வாஜ்பாய் என்ற தலைவரின் செல்வாக்கு இந்த எதிர்ப்புணர்வில் அடிபட்டு விட்டது; மக்களிடமும் வாஜ்பாய் பெயர் எடுபடவில்லை. அடுத்தபடி ஜெயலலிதாவுக்கு எதிரான உணர்வு, ஒரு பிரளயம் போல் தமிழக மக்களிடையே இருக்கிறது.

அந்தப் பிரளயத்தில் அவர் தூக்கி எறியப்பட்டு, கண்காணாமல் போய் விடுவார். எனவே இந்தத் தேர்தலில் ஜெயலலிதாவுக்குப் படுதோல்வி என்பது மட்டுமல்ல; அரசியல்ரீதியாக வீழ்ச்சியும் துவங்கி விட்டது என்பது என் கருத்து.

பொடா மறு ஆய்வுக் கமிட்டி 'உங்கள் மேல் 'பொடா' வழக்குப் போட எந்த முகாந்திரமும் இல்லை' என்று சொல்லியிருக்கிறது. ஆனால் நீங்கள் 580 நாட்கள் சிறையிலிருந்திருக்கிறீர்கள்... தடை செய்யப்பட்ட இயக்கத்துக்கு ஆதரவாகப் பேசாமல், ஈழத் தமிழர்களுக்கு அனுதாபம் தெரிவிப்பதோடு மட்டும் நிறுத்திக் கொண்டால், இப்படிப்பட்ட அரசியல் பழிவாங்கலைத் தவிர்க்கலாமே.

**வைகோ :** பழிவாங்குவார்கள் என்று பயந்து கொண்டு கருத்துச் சொல்லாமல் இருந்தால், அதைவிடக் கோழைத்தனம் எதுவும் கிடையாது.



# வைகோ பேட்டி

# “ஒ

பெரியார், ராஜாஜி போன்ற தலைவர்கள் மற்றவர்களுக்குப் பிடிக்கிறதோ பிடிக்கவில்லையோ, ஏற்றுக் கொள்கிறார்களோ இல்லையோ, தங்கள் கருத்துகளைச் சொல்லி வந்தார்கள்.

ஈழத் தமிழர்கள் பக்கம் நியாயமிருக்கிறது என்று சொல்வது தவறா? தமிழர் இனப் பிரச்னை இவ்வாறுதான் உலகத்தின் கவனத்துக்கு வந்திருக்கிறது. கிளிநொச்சியில் புலிகள் தலைவர்

பிரபாகரன், இருபத்திரெண்டு பாராளு மன்ற உறுப்பினர்களுடன் சமாதானப் பேச்சுவார்த்தை நடத்துவதை தொலைக் காட்சிகள் காட்டுகின்றன, பத்திரிகை களில் போட்டோக்கள் வருகின்றன. இப்படி லட்சக்கணக்கான மக்கள் படிப் பதையும், பார்ப்பதையும், நான் மேடை யில் சொன்னால் என்ன தவறு? கருத்துச் சுதந்திரத்துக்காக நீதி கேட்டு, நான் சுப்ரீம் கோர்ட்டில் வைத்த வாதம் இதுதான். என் மனுவில் இருந்த நியா யத்தை ஏற்றுக் கொண்டு, தீவிர வாத இயக்கத்தை ஆதரித்து கருத்துச் சொல்வது தவறில்லை; அதற்கு நிதி கொடுப்பது, ஆயுதம் கொடுப் பது, ஆள் சேர்ப்பது ஆகியவை தான் குற்றங்கள், என்று சொல்லி யிருக்கிறது. இது கருத்துச் சுதந் திரத்திற்குக் கிடைத்த வெற்றி. எனவே எந்த அச்சுறுத்தல், பய முறுத்தல், பழிவாங்கல் இருந் தாலும், என் கருத்துகளைத் தொடர்ந்து சொல்வேன். ஏழு வரு டங்கள் தண்டனை கொடுத்தாலும் ஏற்றுக் கொண்டு சிறைக்குச் செல் வேன்.

*அத்வானியைக் கடுமையாக எதிர்க் கிறீர்களே!*

## டாது!”

**வைகோ :** பொடா மறு ஆய்வுக் கமிட்டி போடுவதற்கோ, பின்னர் 'பொடா'வில் திருத்தம் கொண்டு வருவ தற்கோ அத்வானிக்குச் சிறிதும் விருப்ப மில்லை. எதிர்க்கட்சிகளின் வற்புறுத்த லாலும், பிரதமரின் பெருந்தன்மை யாலும்தான் இவை சாத்தியமாயின. இது மட்டுமல்ல; வாஜ்பாய்க்குத் தெரியாம லேயே மக்கள் பிரதிநிதித்துவ சட் டத்தில் ஒரு திருத்தம் கொண்டு வர முயன்றார் அத்வானி. அதன்படி ஒரு வாரம் சிறைத் தண்டனை பெற்றாலே, தேர்தலில் நிற்க முடியாது என்று ஆகி விடும். ஜெயலலிதா போன்ற அரசியல் வாதிகளுக்கு, பழிவாங்க நல்ல சந்தர்ப்பம் உருவாக்க முயன்றார் அத்வானி. அதைச் சரியான சமயத்தில் கண்டுபிடித்து பிரத மரின் தனி கவனத்துக்குக் கொண்டு சென்றேன். அந்தத் திருத்தம் கைவிடப்



பட்டது. இது போன்ற விஷமத்தனத்தில் அத்வானி ஈடுபடக் காரணம், ஜெயலலி தாவின் கூட்டணி வேண்டும் என்பதே!

முரசொலி மாறன் சிகிச்சை பெற்று வந்த போது, சக அமைச்சர் என்ற முறை யில் கூட சென்னைக்கு வந்தும் பார்க்க வில்லை அத்வானி. ஜெ. கோபித்துக் கொள்வாரே! இவரைப் போன்றவர்கள் மோடி போன்ற தளபதிகளின் உதவி யோடு நாட்டின் பொறுப்புக்கு வந்தால், மதக் கலவரம் தான் வரும். அதை அடக்க இன்று மகாத்மா காந்தி கிடை யாது. நல்லிணக்கத்துக்குப் பாடுபட்ட வரைச் சுட்டுக் கொன்றார்கள். சுடுவ தற்கு திட்டம் போட்டுக் கொடுத்த சாவர்க்கரின் படத்தை, பாராளுமன் றத்தில் திறந்து வைத்திருக்கிறார்கள். இன் றைக்கு ஒரு மதக் கலவரம் வந்தால், எந்த

அரசியல் கட்சியாலும் அதைத் தடுக்க முடியாது. தடுக்கணும் என்றால் சமய நல்லிணக்கம் ஒன்றுதான் வழி.

*நீங்கள் இந்தப் பாராளுமன்றத் தேர்தலில் நிற்காததற்கு முக்கியக் காரணம்?*

**வைகோ :** திராவிட உணர்வுகள் நன்கு வேரூன்றி வளர்ந்து வரும் தமிழகத்தில், ஜெயலலிதா போன்றவர்கள் அந்த உணர்வுகளை மழுங்கடித்து, திராவிட இயக்கத்துக்கு விரோதமான சிந்தனைகளை உருவாக்க முயல்கிறார்கள். இந்த அடிப்படையில், மக்களிடையே, குறிப்பாக இளைஞர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கிருக்கிறது. அடுத்து, கட்சியைப் பலப்படுத்த வேண்டும். பாராளுமன்றத்துக்குச் சென்றால், தில்லியிலேயே பாதி நாட்கள் செலவாகிவிடுகின்றன. பாராளுமன்ற உறுப்பினராக பல்லாண்டுகள் பணியாற்றி, பல நல்ல பணிகள் செய்து பெயர் பெற்றிருக்கிறேன். அந்த நல்ல பெயரோடு விலகி நிற்கலாமே என்ற கருத்தின் அடிப்படையிலும் போட்டியிடவில்லை.

*தமிழ்நாட்டு அரசியலில் முழுதாக ஈடுபட்டு, தி.மு.க.வையும் சேர்த்து திராவிட இயக்கங்களின் எதிர்காலத் தலைவராக பரிமளிக்க நீங்கள் திட்டமிடுகிறீர்கள்; அதனால்தான் இந்தத் தேர்தலில் நிற்கவில்லை என்று பேச்சு அடிபடுகிறதே...?*

**வைகோ :** தி.மு.க. பெரிய இயக்கம். அதில் பல தலைவர்கள் இருக்கிறார்கள். டாக்டர் கலைஞர் ஆரோக்கியமாக கட்சியை நடத்திக் கொண்டு வருகிறார். நாங்கள் பிரிந்து வந்திருந்தாலும், அண்ணன் - தம்பி போன்று எங்களோடு பாசமாக இருக்கிறார். நாங்கள் தனிக் குடித்தனம் வந்திருக்கிறோம். இது என்றும் தனிக்குடித்தனமாகத்தான் இருக்கும். கூட்டுக் குடித்தனமாக வருவதற்கு வாய்ப்பில்லை.

*அரசியலில் எது வேண்டுமானாலும் நடக்கும் என்ற சூழலில், இதுபோன்று எப்படி உறுதியாகச் சொல்கிறீர்கள்?*

**வைகோ :** தனிக்குடித்தனம் போன பிறகு கூட்டுக் குடும்பத்துக்குத் திரும்ப ஏது வாய்ப்பு?

*இருந்தாலும் திராவிட இயக்கத்தில் தகுதி வாய்ந்த ஒரு தலைவர் தேவை என்ற முறையில்...?*

**வைகோ :** அங்கே (தி.மு.க.) நிறையத் தலைவர்கள் இருக்கிறார்கள் என்றேனே! அண்ணாவுக்குப் பிறகு பெரிய தலைவர் டாக்டர் கலைஞர். அவர் தலைமையிலிருக்கிறார். நூறாண்டுகளுக்கு மேல் அவர் நலமுடன் வாழ்வார். நீங்கள் சொல்வது போல யூகங்களுக்கு வாய்ப்பில்லை.

*1999ல் தி.மு.க.வின் கூட்டு, 2001ல் தனித்து நின்றீர்கள். இப்போது மீண்டும் தி.மு.க.வுடன். இந்த நிலையில் தமிழ்நாடு முழுதும் உள்ள தி.மு.க. தொண்டர்கள் உங்களோடு ஒட்டிப் பழகுகிறார்களா?*

**வைகோ :** டாக்டர் கலைஞர் நான் சிறையிலிருந்த போது இரண்டு முறை வந்து பார்த்தார். தலைவரே என் மீது பாசமாக இருப்பதால், தமிழ்நாடு முழுவதும் தி.மு.க. தோழர்கள் என் மீது அன்பாகவும், பாசமாகவும் இருக்கிறார்கள். கலைஞரின் போர் வாளாக நான் இருந்த காரணத்தாலும், அவரது உடன்பிறப்புக்களுக்கு என் மீது பாசம் உண்டு.

*தி.மு.க.வும், ம.தி.மு.க.வும் ஒட்டுவதற்கான வாய்ப்பு இருக்கிறதா?*

**வைகோ :** வாய்ப்பே இல்லை. கலைஞர் தலைமையிலான கூட்டணியில் தொடர்ந்து நீடிப்போம்.

— ப்ரியன்

''என் வீட்டைக் கோயில் மாதிரி வெச்சிருக்கேன், சார்...!''

''அதுக்காக வாசலில் உண்டியலை வைத்து, வீட்டுக்கு வருபவர்களிடம் காணிக்கை போடச் சொல்றது நல்லாயில்லை!''

- எம். அசோக்ராஜா



# ஆன்மீகம் தரும் மனபலம்
# உடற்கல்வி தரும் உடல்பலம்
# இவை தரும் வாழ்வில் வளம்

**RTN.PHF. G. சுந்தரராஜன், திண்டுக்கல்**

நம் அனைவருடைய அன்றாட வாழ்வில் ஒன்றாக திடமாக கலந்து விட்டதுதான் ஆன்மீகமும், உடற் கல்வியும்.

**கோவில் இல்லாத ஊரும், உடற் பயிற்சி செய்யாத உடலும் சிறப்படையாது.**

இந்து, கிறிஸ்தவம், இஸ்லாமியம் என பல்வேறு மதத்தினரும் ஒற்றுமையாக வாழும் இந்த உலகில் நாம் ஒவ்வொருவரும் அறம் செய்தால் அன்பு விளையும் - அன்பால் அருள் தோன்றும் - அருளால் தவம் விளையும் - தவத்தால் தோன்றும் தெய்வீகமும், ஜீவனும் ஒன்றாக உயர்வடைவதுதான் வாழ்வின் லட்சியமாகும். இத்தகைய சிறப்பு பெற்ற கடவுள் தர்மம், அதர்மம் என்ற விதைகளை தூவி ஒரு விவசாயியாக அவரே உலகத்தில் அவதரித்து நல்ல உள்ளங்கள் என்ற தர்மப் பயிரை காத்து வருகின்றார்.

**''அறத்தான் வருவதே இன்பம்''** என்பதற்கிணங்க நாம் அனைவரும் தினமும் ஒரு பிராணிக்கு உணவிடுதல், ஏழை எளியவர்க்கு உணவளித்தல், ஆலயங்களுக்குச் சென்று தெய்வதரிசனம் செய்தல் என அன்றாடம் கடைப்பிடித்தல் வேண்டும். இதனால் உள்ளம் உறுதியடையும்.

ஆன்மீகத்தைப் போலவே உடற்கல்வியும் மனிதவாழ்வில் இன்றியமையாத ஒன்றாகும். **நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம், உடல் ஆரோக்கியமே உறுதியான செல்வம்** என்ற கருத்திற்கேற்ப, நாம் அனைவரும் ஏதாவது ஒரு உடற்பயிற்சி, விளையாட்டைத் தேர்ந்தெடுத்து தொடர்ந்து விளையாடி வரவேண்டும். தவிர எளிமையான நடைபயிற்சி செய்வதால் **உடலில் ஆரோக்கியம் வளரும், இரத்தத்தில் சர்க்கரை கட்டுப்பாடும், உடல் உறுதியும், மன வலிமையும்** பெற்று சிறப்புடன் வாழலாம்.

**நாள்தோறும் நடை பயில்வோம்**
**நல்லதோர் உடல் பெறுவோம்**

நமது வாழ்வில் இன்றியமையாத "இரு இணைகோடுகள்" போல் திகழும் **ஆன்மீகமும் உடற்பயிற்சியும்** எவ்வளவு முக்கியம் என்பதை இளம் வயதிலேயே குழந்தைகள், மாணவ, மாணவியர்கள் அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

**''காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளுதல் வேண்டும்''** என்பதற்கேற்ப இத்தகைய சிறப்பம்சங்களைப் பயன்படுத்தி

**உடற் கல்வியால் உடல் பலமும்,**

**ஆன்மீகத்தால் மனபலமும்,**

**நடைப்பயிற்சியால் நல்வாழ்வும்** பெற்று வளமான வாழ்வு பெற எல்லாம் வல்ல இறைவனை வேண்டிக் கொள்கின்றேன். ஆன்மிகத்தின் வழிகாட்டுதலோடு உடற் பயிற்சியும் செய்து உறுதியான வாழ்வு பெறுக.

**வாருங்கள் வடம் பிடிப்போம் வரலாற்றில் இடம் பிடிப்போம்.**

# ராகுல் 'ஜன்ம'

**அமேதி மக்கள் 'எங்க வீட்டுப் பிள்ளை' என்று கொண்டாடுகின்றார்கள் ராஜீவின் மகனை! ராகுல் காந்தி இந்த ஆதரவை முறையாகப் பயன் படுத்திக் கொண்டால், அமேதி அவரது அரசியல் வாழ்வின் ஜன்ம பூமியாகிவிடும்!**

'இதுவா, வி.ஐ.பி. தொகுதி!' என்று ஏமாற்றம் ஏற்படுகிறது. லக்னோவிலிருந்து மூன்றரை மணி நேர சாலைப் பயணம் செய்து அமேதியை அடைகிறபோது. இருளில் மூழ்கிக் கிடந்தது அந்த சின்ன ஊர். ஜெனரேட்டரின் தயவினால், ஒரு சில கடைகளில் விளக்குள் எரிவதாக பாவனை பண்ணிக் கொண்டிருக்கின்றன. பொதுப்பணித் துறையின் டாக் பங்களா, 'டார்க்' பங்களாவாக பயமுறுத்தவே, அந்த ஊரின் ஒரே லாட்ஜான சாயிதாமில் தஞ்சம் புக வேண்டியிருக்கிறது.

மின்சாரத் தட்டுப்பாடுதான் அமேதியின் இன்றைய தலையாயப் பிரச்னை. இரவு பதினொரு மணியிலிருந்து காலை நான்கு மணிவரையிலும், மறுபடியும் காலை எட்டிலிருந்து மாலை ஐந்து மணி வரையிலும்தான் மின்சாரம் கிடைக்கிறது. இதுவும் தேர்தல் அறிவிக்கப்பட்ட பின் கிடைத்துள்ள போனஸ்! முன்பெல்லாம் பத்து மணி நேரம் மின்சாரம் விநியோகிக்கப்பட்டாலே அதிசயம்! கிராமப் புறங்களிலோ, வாரத்துக்கு ஒரு நாள் மட்டுமே மின்சாரம் எட்டிப் பார்த்து விட்டுப் போகுமாம்!

மற்றொரு முக்கியமான பிரச்னை சாலைகள். லக்னோ-வாரனாசி நெடுஞ்சாலையில்



• ராகுல்



• ராகுல் - ராஜீவ் முகங்கள்





• "எங்க வீட்டுப் பிள்ளை"

# டி!

வழுக்கிக் கொண்டு படுவேகமாகச் சென்ற எங்கள் கார், அமேதியை நெருங்க நெருங்க, மாட்டு வண்டியாக மாறியது.



**ரா**ஜீவ்காந்தி காலத்தில் நல்ல வளர்ச்சியைக் கண்ட அமேதி, தற்போது பின் தங்கி விட்டதற்கு, காங்கிரஸ் அல்லாத மாநில அரசாங்கமே காரணம் என்று குற்றம் சாட்டுகிறார்கள். வேண்டுமென்றே இத்தொகுதி புறக்கணிக்கப்படுகிறது என்பது இம்மக்களின் வாதம்.

ராஜீவ் ஆட்சி காலத்தில், முந் நூறு படுக்கைகள் கொண்ட சஞ்சய் காந்தி டிரஸ்ட் ஆஸ்பத்திரி கட்டப்பட்டது. BHEL, HAL, ACC மற்றும் Indo-Gulf Fertilizer போன்ற பெரிய தொழில் நிறுவனங்கள் தங்கள் கிளைகளை இங்கு நிறுவின. நல்ல சாலைகளும் மின்சாரமும் குடிநீர் வசதியும் இப்பகுதிக்குக் கிடைத்தன.

ஆனால் இன்று பெரும்பாலான தொழிலகங்கள் மூடப்பட்டு, மக்கள் வேலையிழந்து தவிக்கின்றனர்.



* டாக்டர் ராம்விலாஸ் வேதாந்தி





* கேஸ் விளக்கு வெளிச்சத்தில் காங்கிரஸ் தொண்டர்கள்...

அமேதிக்கு நாம் சென்றது, தேர்தல் நடைபெறும் முன். ராகுல் காந்தியை, மக்கள் தங்களுக்கு மறு வாழ்வளிக்க வந்த ராஜீவின் பிரதிபலிப்பாகக் காண்கிறார்கள். அதே உயரம், முகச் சாயல், சிரிப்பு, கன்னத்துக்குழி என்று ராஜீவ் காந்தியின் அச்சாகவே காணப்படும் ராகுலின் மேல், இத் தொகுதி மக்கள் மிகுந்த பாசம் வைத்துள்ளார்கள். ராகுல் - பிரியங்கா இருவரில், ராகுலே இத்தொகுதியிலிருந்து போட்டியிடப் பொருத்

**-அமேதி ஸ்பாட் ரிப்போர்ட்**

தமானவர் என்று சோனியா காந்தி தீர்மானித்ததற்கும் இதுவே காரணமாக இருக்கலாம். கணிப்பு வீண் போகவில்லை!

"ராகுல், ராஜீவ் காந்தியின் பிரதிபலிப்பு, வளரும் இந்தியாவின் சின்னம்" என்ற வாசகங்களுடன், ராஜீவ்- ராகுல் முகங்களை எது ராஜீவ், எது ராகுல் என்று மக்கள் குழம்பிப் போகும் வண்ணம், அடுத்தடுத்து வரிசையாக ஒட்ட வைத்த நீண்ட போஸ்டர்களை பல இடங்களில் மாட்டியுள்ளார்கள்.

அமேதியில் எங்கும் ராகுல், யாரைக் கேட்டாலும் ராகுல். "உங்கள் வோட்டு யாருக்கு?" என்று கேட்டால்.

●●

**எனது தந்தை அமேதியின் முன்னேற்றத்திற்காக ஒரு கனவு கண்டார். அது முழுமை பெறவில்லை. அதை நிறைவேற்ற வந்துள்ளேன்.**

●●

"இது என்ன கேள்வி?" என்று நம்மை ஆச்சரியமாகப் பார்க்கிறார்கள். "ஹமாரா ராகுல் பையா!" (எங்கள் ராகுல் தம்பி), "ராகுல் பேட்டா" (எங்கள் பிள்ளை ராகுல்) என்று செல்லம் கொஞ்சுகிறார்கள்.

ராகுலும் தமது பேச்சில் ஒரே விஷயத்தைத் தான் திரும்பத் திரும்ப நினைவூட்டியிருக்கிறார். "எனது தந்தை அமேதியின் முன்னேற்றத்திற்காக ஒரு கனவு கண்டார். அது முழுமை பெறவில்லை. அதை நிறைவேற்ற வந்துள்ளேன்" என்றும், "அமேதியுடன் எங்கள் குடும்பத்துக்கு நீண்ட காலத் தொடர்பு உள்ளது; என்னுடைய மற்றொரு வீடு அமேதி" என்றும் அவர் பேசக் கேட்ட கூட்டம், 'த்ரில்' ஆகியிருக்கிறது.

பொதுத் தொலைபேசி கடை நடத்தும் ராகேஷ் திவாரி என்ற இளைஞன், "ராகுல் இந்த மண்ணின் புத்திரன்" என்று முழங்குகிறார். கோவிலுக்குப் போய்க் கொண்டிருந்த பெண்மணிகளை வழி மறித்துக் கேட்டால், அவர்களும் "ராகுல் எங்கள் வீட்டுப் பிள்ளை" என்று உற்சாகத்துடன் சொல்கிறார்கள்.

அமேதி மக்களைப் பொறுத்த வரையில், சோனியா காந்தி வெளிநாட்டில் பிறந்தவர் என்பது ஒரு பிரச்னையே இல்லை. "இந்திய கலாசாரப்படி, புகுந்த வீடுதான் ஒரு பெண்ணுக்கு நிரந்தர மண். அப்படியிருக்கையில் சோனியா எப்படி வெளிநாட்டுக்காரர் ஆவார்?" என்று அமேதி மக்கள் ஆத்திரடைகிறார்கள்.

ராகுல் காந்திக்கு எதிரான பா.ஜ.க வேட்பாளரோ, சோனியா



* காங்கிரஸ் அலுவலகம்

வெளிநாட்டில் பிறந்தவர் என்பதையே, தேர்தல் பிரசாரங்களில் முக்கிய ஆயுதமாகப் பிரயோகித்திருக்கிறார். பா.ஜ.க. வேட்பாளரான டாக்டர் ராம்விலாஸ் வேதாந்தி மகாராஜ், ராம ஜன்ம பூமி டிரஸ்டின் செயற்குழுத் தலைவர். இதற்கு முன்பு பிரதாப்கர் தொகுதியிலிருந்து வெற்றி பெற்றவர். இந்த சன்யாசி வேட்பாளர், நவீன பாரதத்தின் இளைய தலைமுறையின் பிரதிநிதியாக விளங்கும் ராகுல் காந்திக்கு நேர் மாறாகக் காட்சியளிக்கிறார்.

பா.ஜ.க. தொண்டர்களின் வழிகாட்டலுடன், மகராஜ்பூர் கிராமத்தில் நடந்து கொண்டிருந்த தேர்தல் கூட்டத்துக்குச் சென்றோம். அதைக் கூட்

டம் என்று சொல்வது தவறு. சுமார் பதினைந்து பேர் ஒரு கோவிலின் வாசலில் குழுமியிருந்தனர். வேட்பாளர் வரும் வரையில், எல்லோரும் "ஸ்ரீராம் ஜெய ராம், ஜெய ஜெய ராம்" என்று பஜனை செய்து கொண்டிருந்தனர். வேதாந்தி மகாராஜோ, "போலோ ஸ்ரீராம் கி ஜெய்!", "ராம் ஜன்ம பூமி கி ஜெய்", "காசி விஸ்வ நாத்ஜி கி ஜெய்!", கிருஷ்ண ஜன்ம பூமி கி ஜெய்! "ஹர ஹர மஹா தேவா" போன்ற கோஷங்களுடன் தமது சொற்பொழிவை(?) துவங்கினார்.

"கொலம்பியாவைச் சார்ந்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதாக இருக்கும் ஒரு வெளிநாட்டவரின் வயிற்றில் பிறந்த ராகுலுக்காக உங்கள் வோட்டு?"

"பாப்ரி மசூதியைத் தகர்த்த எங்களால், காங்கிரஸையா தகர்க்க முடியாது?" போன்ற கேள்விகளுடன் அர்த்தமற்றதாக இருந்தது



• மசூதியின் வாசலில் காங்கிரஸ் கொடிகளின் தோரணம்

பா.ஜ.க. வேட்பாளர் வேதாந்தியின் சொற்பொழிவு.

**பா**.ஜ.க. தொண்டர்களும் சோனியாவையும், ராகுலையும் சரமாரியாகத் தாக்குகிறார்கள். சோனியா காந்தி கடந்த ஐந்தாண்டு காலமாக இத்தொகுதியின் முன்னேற்றத்திற்காக ஒன்றுமே செய்யாமல், தொகுதியின் வளர்ச்சிக்கென்று ஒதுக்கப்பட்ட நான்கு கோடி ரூபாயை அப்படியே திருப்பிக் கொடுத்து விட்டார் என்று குற்றம் சாட்டுகிறார்கள்.

**கா**ங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் பதிலடி கொடுக்கிறார்கள்.

"இத்தொகுதியில் பணிகளைச் செய்வதற்கு, மாநில அரசு கொஞ்சம் கூட ஒத்துழைக்கவில்லை. சோனியா இத்தொகுதி பக்கம் வருவதாகச் சொன்னாலே, இங்குள்ள அதிகாரிகள் (கலெக்டர்) அவருக்குப் பாதுகாப்பு அளிப்பது இயலாத காரியம் என்று சொல்லி அவரை வரவிடாமல் தடுத்துக் கொண்டிருந்தார்கள்" என ஆதங்கப்படுகிறது காங்கிரஸ்.

பா.ஜ.க தொண்டர்களின் மற்றொரு குற்றச்சாட்டு, ராகுல் காந்திக்கு நாலு வார்த்தை கூட இந்தி பேச வரவில்லை. அரசியல் அனுபவம் இல்லை. ஏதோ பரம்பரைச் சொத்து போல, அவனை இங்கு கொண்டு வந்து நிறுத்தி விட்டார்கள் என்பது. ராகுல் காந்திக்கு சரளமாக இந்தி பேச வரவில்லை என்பது ஓரளவிற்கு உண்மையாக இருந்தாலும், அவருடைய கையசைப்பும், புன்னகையுமே மக்களைக் கவர்வதற்குப் போதுமானதாக உள்ளது.

**அ**மேதி மக்கள் ராகுலிடமிருந்து நிறையவே எதிர்பார்க்கிறார்கள். ராகுல் காந்தியின் வெற்றி என்னவோ நிச்சயம். ஆனால் மக்களின் எதிர்பார்ப்புகளை அவர் எவ்வளவு தூரத்திற்குப் பூர்த்தி செய்வார் என்பது சஸ்பென்ஸ்!

அமேதியிலிருந்து:
**ரமாமணி சுந்தர்**
படங்கள்: **செந்தில் ஆர். கணேஷ்**

# நமீதாவின் டெக்னிக்!



ஒட்டகச் சிவங்கி உயரம். பட்பட்டென்று வெடிக்கும் சரவெடிப் பேச்சு. சண்டிகரிலிருந்து வந்திருக்கும் நமிதாவின் அடையாளங்கள் இவை. எடுத்த எடுப்பிலேயே "புதுமுக ஹீரோக்களோடு நடிக்கமாட்டேன்" என்று அதிரடியாக முழங்கும் இவர், அதற்குச் சொல்லும் காரணம் "எங்கள் அண்ணா படத்தில் விஜயகாந்த் ஜோடியாக நடித்ததால், அவரது ரசிகர்கள் அத்தனை பேருக்கும் நான் அறிமுகமாகிவிட்டேன். இப்போது 'ஏய்' படத்தில் சரத்குமார் ஜோடி. படம் வந்தபிறகு அவரது ரசிகர்களிடமும் எனக்கு சுலபமாக அறிமுகம் கிடைத்துவிடும். இப்போது புரிகிறதா, புதுமுக ஹீரோக்களை நான் புறக்கணிக்கும் ரகசியம்?" அடடே!

\- ஸ்ரீ




## தண்ணீர், கண்ணீர்!

தமிழக அரசின் முறையீடு பலன் விளைவித்திருக்கிறது. காவிரி நதிநீர் ஆணையம் விழித்துக் கொண்டு, கர்னாடக அரசிடம் விளக்கம் கேட்டிருக்கிறது. காவிரிப் படுகையில் ஐயாயிரம் கோடி ரூபாய் செலவில், கர்னாடக அரசு புதிய பாசனத் திட்டங்களைத் திட்டமிட்டிருக்கிறது. இந்தத் திட்டங்கள், தமிழக விவசாயிகளின் தொன்றுதொட்ட ஆயக்கட்டு உரிமைகளுக்கு விரோதமானவை; ஆதலால் அவை நிறுத்தப்பட வேண்டும் என்பது தமிழக அரசின் முறையீடு. இந்த முறையீடு நியாயமானது என ஏற்றுத்தான் கர்னாடக அரசிடம் ஒரு வார காலத்துக்குள் விளக்கம் கேட்டிருக்கிறது ஆணையம். இத்தனைக்கும் இத்தகு திட்டங்களை வகுக்க கர்நாடகாவுக்கு உரிமை இல்லை என ஆணையம் ஏற்கெனவே அம்மாநில அரசை எச்சரித்துள்ளது.

ஆணையத்தின் உத்தரவை மதித்து கர்னாடகம் என்ன விளக்கம் தரும்? பணிகள் நிறுத்தப்படுமா? தமிழக விவசாயிகளின் உரிமைகள் காக்கப்படுமா? என்பதற்கெல்லாம் நம்பிக்கையோடு பதில் அளிக்கவியலாது. உச்சநீதிமன்ற ஆணையையே மதியாத கர்னாடக அரசிடம், நாம் என்ன எதிர்பார்க்க முடியும்?

ஆனால், தமிழக விவசாயிகளின் உரிமைக்காக கர்நாடகாவுடன் போராடிவரும் தமிழக அரசு, இன்னொருபுறம் தமிழக விவசாயிகளுக்கே பெரும் கொடுமை இழைத்து வருகிறது.

தமிழகமெங்கும் வரலாறு காணாத தண்ணீர்ப் பஞ்சம் நிலவுவது நமக்குத் தெரியும். நகர்ப்புறங்களின் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய, கிராமப் பகுதிகளிலிருந்து தண்ணீர் தற்போது



# கல்கி



**2004 மே 2**
தாரண சித்திரை 20
மலர் : **62**
இதழ் : **40**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




உறிஞ்சப்பட்டு வருகிறது. உதாரணமாக, ஏற்கெனவே வற்றிக் கிடக்கும் வீராணம் ஏரியில் ராட்சஸ ஆழ்துளை கிணறுகள் இறக்கி, தண்ணீர் இறைக்கப்படுகிறது. சுட்டெரிக்கும் வெயிலில் அந்தத் தண்ணீர், கால்வாய்கள், பைப்புகள் வழியே பாய்ந்து, சென்னைக்கு வருவதற்குள் எவ்வளவு வற்றுமோ? எத்தனை வீணாகுமோ, தெரியாது. ஆனால், எதிர் பார்க்கிற அளவு தண்ணீர் சென்னைக்குக் கிடைக்காது என்பது மட்டும் உறுதி! ஏரிப் படுகை மட்டுமின்றி, சுற்றிலுமுள்ள கிணற்று நீர், நிலத்தடி நீர், எல்லாமே வற்றிப்போகும். வீராணம் ஏரியைப் பாசனத்துக்கு நம்பியிருக்கும் விவசாயிகள், கடுமையாக பாதிக்கப் படுவார்கள் என்பதும் உறுதி!

வீராணம் பகுதி விவசாயிகளைப் போலவே, பாலாற்றுப் படுகையைச் சார்ந்துள்ள விவசாயிகளும் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

தற்போது, பாலாற்றுப் படுகையிலிருந்து ஆழ்துளை கிணறு மூலம் இடைவிடாது நீர் இறைக்கப்பட்டு லாரிகளில் ஏற்றி, சென்னைக்கு அனுப்பப்படுகிறது.

இயற்கைக்கு விரோதமான இந்த நீர்வளச் சுரண்டலின் பின்விளைவுகள் பயங்கரமாக இருக்கும். உடனடி விளைவு என்பதோ, பாலாற்றுப் படுகை விவசாயிகளின் வயிற்றுப் பிழைப்பில் அடி!

கர்நாடக அரசிடம் காவிரி ஆணையம் விளக்கம் கேட்ட அதே தினத்தில், சென்னையில் பாலாற்று விவசாயிகள் ஒன்று கூடி தங்கள் பிரச்னையை எடுத்துரைத்திருக்கிறார்கள். MIDS (Madras Institute of Development Studies) இந்தக் கருத்தரங்குக்கு ஏற்பாடு செய்திருக்கிறது.

பாலாற்றுப் படுகைச் சுற்றுவட்டாரத்திலிருந்து தினமும் நாலாயிரம் லாரி தண்ணீர் (குறைந்தபட்சம்) சென்னைக்கு வருகிறது. ஒவ்வொரு லாரியும் 12,000 முதல் 20,000 லிட்டர் கொள்ளளவு!

"நாங்கள் தண்ணீர் அறுவடைக்குச் சம்மதியாவிட்டால், பக்கத்து நிலத்துக்காரர் ஒப்புக் கொண்டு விடுவார். அப்போது எங்கள் நிலமும் சேர்ந்துதானே வற்றிப்போகும். அதற்குப் பதில் எங்கள் நிலத்தையே குத்தகைக்குத் தந்து, பணத்தையாவது வாங்கிக்




கொள்ளலாமே'' என்கிறார்கள் இந்த விவசாயிகள்!

'இந்த நடவடிக்கையால் அதிக பாதிப்புக்குள்ளாகிறவர் சிறு விவசாயிதான்' என்ற வருத்தம் பரவலாக இருக்கிறது. விவசாயிகள், தண்ணீர் வியாபாரிகள், அரசு என முத்தரப்பும் சந்தித்துப் பேச MIDS ஏற்பாடு செய்து வருகிறது.

தண்ணீர்ப் பஞ்சத்தைச் சமாளிக்க அரசு நடவடிக்கை அவசியம். ஆனால், கடைத் தேங்காயை வழிப்பிள்ளையாருக்கு உடைக்கிற கதையாகக் காரியம் செய்து, என்ன பயன்? ஒரு பிரச்னையைத் தாற்காலிகமாகத் தீர்த்து, ஒன்பது பிரச்னைகளை நிரந்தரமாக உருவாக்குவதில் அர்த்தம் இல்லை.

மக்கள் தொகை அதிகரிப்பு, நகர்ப்புற வளர்ச்சி ஆகியவற்றுக்கு ஏற்ப நீர் ஆதாரங்களைப் பெருக்குவது.

தண்ணீரைச் சிக்கனமாகப் பயன்படுத்த, எளிய வழிமுறைகளை மக்களிடையே பிரபலப்படுத்துவது.

தண்ணீரை வீணடிப்பவர்களுக்குக் கடும் அபராதம்.

பஞ்சம் தீர்கிற வரையில் கட்டடப் பணிகள் ஒத்திவைப்பு....

- போன்ற வழிமுறைகளைக் கையாள வேண்டும்.

கடல் நீரைக் குடிநீராக்க ஏராளமாகச் செலவாகும் என்பதால்தான், கடல்நீர் சுத்திகரிப்பு நிலையங்கள் இன்னும் பெரிய அளவில் நிறுவப்படவில்லை. ஆனால், பூமியிலிருந்து பம்ப் செய்து, லாரியில் தண்ணீர் ஏற்றி வரும் செலவைப் பார்க்க, சுத்திகரிப்பு நிலையச் செலவு குறைவாகவே இருக்கும்.

ஆனால் நடப்பது என்ன... கழுதி - கடலாடி பகுதியில் கடல்நீரைக் குடிநீராக்கும் நிலையத்தை நிறுவியது அ.தி.மு.க.அரசா? தி.மு.க.அரசா? என்று தேர்தல் மேடைகளில் விவாதம் பொறி பறக்கிறது! இத்தனைக்கும், தொழில்நுட்பச் சிக்கல் காரணமாக, அந்த நிலையம் இன்னும் பணியாற்ற ஆரம்பிக்கவே இல்லை!

தேர்தல் முடிய விவாதங்கள் தொடரும். தேர்தல் முடிகிற வரையில் தண்ணீர் வினியோகமும் ஜரூராக நடைபெறும். நிரந்தரத் தீர்வுகள் பிறக்கா விட்டால் விவசாயிகள் இன்று சந்திக்கும் அச்சுறுத்தல் பேரபாயமாக உருக் கொள்ளும். ○

# சொன்ன சொல்!

போஸ்ட் கார்டு கதை

பி. ஜானகி

"முடிவா நீ என்ன சொல்ற?" மோகன் கேட்டான்...

"என்னால உங்க அப்பா, அம்மாவப் பாக்க முடியாது. முதியோர் இல்லத்துல சேர்த்துடுங்க. இதுதான் என் முடிவு."

மறு நாள் தந்தி வருகிறது.

"என்னங்க, எங்க அப்பா தந்தி அடிச்சிருக்காங்க... அவங்களுக்கு உடம்பு சரியில்லையாம். நம்ம கூட வந்து இருந்துடப் போறாங்களாம்!"

"அதெல்லாம் முடியாது... முதியோர் இல்லத்துல சேரு."

"என்னங்க இப்படி மாறிட்டீங்க? அன்னிக்கு கல்யாண மாலை மோகன்கிட்ட எங்க அப்பா, அம்மா மாதிரி பாப்பேன்னு சொன்னீங்க...!"

"ஆமாம், இப்பவும் நா அப்படித்தானே சொல்றேன். எங்க அப்பா, அம்மா அங்க தானே இருக்காங்க. இவங்களும் அங்க இருக்கட்டும்...!"

பிரேமா பேய் அறைந்தாற் போல் நின்றாள்.

# கல்கி

அடுத்த இதழில்



சத்தியப்பிரியன் எழுதும்

## வலம்புரி முத்து

சொக்க வைக்கும் செட்டிநாட்டுக்
காதல் கதை ஆரம்பம்!

அடுத்த

னி கல்கி

அக்குபங்சர்
அ முதல்...



# வலை பாயுதே!

இந்த 2004ல் உலகில் கிட்டத்தட்ட எழுபது நாடுகள் தேர்தலைச் சந்திக்கின்றன. உலகின் பல நாடுகளில் தேர்தல் நடைபெறும் விதம், அங்கே உள்ள கட்சிகளின் விவரம், மக்கள் பிரதிநிதிகளின் சபை எப்படி உள்



ளது போன்ற பல தகவல்கள் குவிந்து கிடக்கின்றன electionworld.org வலைத் தளத்தில். அரசியல் ஆர்வலர்களுக்கும், அத்துறை மாணவர்களுக்கும் - இது ஓர் என்சைக்ளோபீடியா.

(நம்மூரு துக்கடா கட்சிகள்கூட இவ் வலைத்தளத்தில் இடம் பிடித்து சரித்திரம் படைத்துவிட்டன)

ஆங்கிலத்தில் குழப்பமான வார்த்தைகளைத் தொகுத்து, அதை ஓர் ஆசிரியர் சொல்லித் தருவதுபோல் சொல்லித்தரும் yourdictionary.com, A முதல் Z வரை வார்த்தைகளைத் தொகுத்து, எழுத்துகளைப் பிரித்துக்காட்டி, அர்த்தத்தையும் அழகாக விளக்குகிறது.

(குழப்பமான சென்னைத் தமிழைப் புரியவைக்க தளம் ஏதுமிருக்கிறதா?)



## சூப்பர் ஸ்டாரின் புத்தகம்

பாலிவுட்டின் லேட்டஸ்ட் பரபரப்பு ஆட்டம், 'லக்ஷயா' படத்தில் ஹிருத்திக் வளைந்து நெளிந்து ஆடும் ஆட்டம்தான். டான்ஸ் மாஸ்டர் வேறு யாருமல்ல, அலாவுதீன் விளக்கில் ஆவியாகிப் போன நம்ம பிரபுதேவாதான். நன்றி masti.net. அதேபோல் பாலிவுட் ரசிகர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் புத்தகம் - '20 years to a decade' என்ற பாலிவுட் சூப்பர் ஸ்டார் ஷாருக் கானின் ஆட்டோ-பயோகிராபியைத்தான்!

தம் குழந்தைப் பருவம் முதல், தற்போது தமது மகள் பற்றிய செய்திகள் வரை புத்தகத்தை இருபத்தைந்து பகுதிகளாகப் பிரித்துள்ளார் ஷாருக். ('வாய்ஸ்' கொடுத்த நம்ம சூப்பர் ஸ்டார், எப்ப புத்தகம் கொடுக்கப் போறாரு?)

- முகில்

**ஜாலி எஸ்.எம்.எஸ்.**

சர்தார்ஜி இரயில்வே நிர்வாகத்தை எப்படி ஏமாற்றுவார்?

டிக்கெட் வாங்கிவிட்டு இரயிலில் ஏறாமல்!



GLOBAL INITIATIVE FOR ASTHMA



# உலக ஆஸ்துமா விழிப்புணர்வு தினம்

நாள்: 2.5.2004

நேரம்: மாலை **5.30** மணி முதல் **9.00** மணி வரை

இடம்: **பாரதிய வித்யா பவன்**

கிழக்கு மாட வீதி, மைலாப்பூர், சென்னை

(அருள்மிகு கபாலீஸ்வரர் கோயில் அருகில்)

---

**"என் சுவாசக்காற்றே"**

ஆஸ்துமா நோய் பற்றிய முழுமையான, தெளிவான விளக்கங்கள் அளிக்கும் சின்னத்திரையில் வெளிவந்த சிறப்பு பேட்டி

**ஆஸ்துமாவின் பாதிப்பு அதிகமா?**
**அறியாமையின் பாதிப்பு அதிகமா?**

உயிர்த்துடிப்புடன் கூடிய உணர்வுபூர்வமான உரையாடல்

**"காற்றுள்ள போதே தூற்றிக் கொள்"**

சொல்வேந்தர் திரு. சுகிசிவம் அளிக்கும் சிறப்பு சொற்பொழிவு

**"கேள்வி பிறந்தது அன்று**
**நல்ல பதில் கிடைத்தது இன்று"**

பொதுமக்களின் கேள்விகளுக்கு விடை தருபவர்

**டாக்டர் R. ஸ்ரீதரன்** M.D., FAAP., AB (USA)

**ஆஸ்துமா - அலர்ஜி - சிறப்பு மருத்துவர்**

## Asthma and Allergy Resource Centre

10. Justice Sundaram Road,
(Near) SaiBaba Temble, Mylapore,
Chennai - 600 004. Ph: 24982233

**அனைவரும் வருக!** **ஆதரவு தருக!**

**அனுமதி இலவசம்**

Advt

# தங்க மண்வெட்டி, நிமிஷத்துக்கு ஆயிரம்

"மண் வாரி மெஷின்களைப் பயன்படுத்தினாலே, இரண்டு வார காலம் பிடிக்கிற பணியை, இரண்டே நாளில் முடித்து விட்டார்களே!" என்று அமெரிக்காவிலிருந்து வந்த இஞ்சினியர்கள் வியந்து போனார்கள். குழந்தைகள் முதல் முதியவர்கள்வரை, ஏழை, பணக்காரர் வித்தியாசமின்றி 'கரசேவாவில் பங்கேற்றது இறைவனின் செயல்தான்" என்று நெகிழ்ச்சியுடன் கூறுகிறார்கள், சென்னையைச் சேர்ந்த சிஷ்பால் சிங்கும், அவரது மனைவி நரீந்தர் கௌரும். பஞ்சாபில் அமிர்தசரஸில் இருக்கும் சீக்கியர்களின் புனிதத்தலமான பொற்கோவிலில், அண்மையில் நடைபெற்ற 'கரசேவா'வில் பங்கேற்றுத் திரும்பி இருக்கிறார்கள் இந்தத் தம்பதி.

"அம்ரீத் சரோவர் என்ற பெரிய குளத்தின் நடுவில்தான் பொற்கோவில் கட்டப்பட்டுள்ளது. கோவிலுக்கு வரும் பக்தர்கள், அந்தக் குளத்தில் நீராடிவிட்டு, கோவிலுக்குள் செல்லுவது மரபு. குளத்தின் தண்ணீர் மிகவும் புனிதமானது. பாவங்களைப் போக்க வல்லது என்பது நம்பிக்கை. பொற்கோவிலை சிரோன்மணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டி என்கிற அமைப்புதான் நிர்வகித்து வருகிறது. அதன் முடிவின்படிதான் அண்மையில் 'கரசேவா' நடந்து முடிந்தது" என்கிறார் நரீந்தர் கௌர்.

"குளத்தில் ஆழம் சுமார் பதினாறு அடி. இதில் இருந்த மொத்தத் தண்ணீரையும் பம்ப் மூலம் வெளியேற்றியதும், அடிப்பகுதியில் சுமார் மூன்று அடி உயரத்துக்குச் சேறும் மண்ணுமாய் இருந்தது. உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து, ஜாதி, மதங்களைக் கடந்து வந்து குவிந்த பக்தர்கள், அந்தச் சேற்றை அப்புறப்படுத்தி, சுத்தம் செய்தார்கள்" என்கிறார் கரசேவா செய்துவிட்டு, சென்னை திரும்பி இருக்கும் இன்னொரு குடும்பத்தைச் சேர்ந்த அறுபத்தியொன்பது வயது ஹர்நாம் கௌர்.



• நவ்தீப்கௌர், ஹர்நாம்கௌர்



• ஆஷ்பீர், நவ்ஜோத்

இவரது மகள் நவ்தீப் கௌர் சொல்கிறார்:

"1923ல் முதன்முறையாக பொற்கோவிலில் கரசேவை நடந்தது. 1973ல் இரண்டாவது தடவை நடந்தது. 84ல் ஆபரேஷன் புளூஸ்டார் நடந்ததையடுத்து, கோவிலைப் புனிதப்படுத்தும் விதமாக, குளத்துத் தண்ணீர் மாற்றப்பட்டது. 88ல் ஆபரேஷன் பிளாக்தண்டரையடுத்து, இன்னொரு தடவை தண்ணீர் மாற்றம். இப்போது முழுமையாகச் சேற்றை அகற்றி, சுத்தப்படுத்தப்பட்டது மட்டுமில்லை, அமெரிக்காவில் வசிக்கும் பூட் பிரதர்ஸ் என்ற பெயர்

## ராட்டி!



சிஷ்பால் சிங் தம்பதி

கொண்ட நான்கு சீக்கிய சகோதரர்கள் ஐந்து கோடி செலவில் ஒரு தண்ணீர் சுத்திகரிப்பு நிலையத்தை நிறுவியுள்ளனர். ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த இன்னொருவரது நன்கொடை, ஐம்பது லட்சம். இதன் பலனாக, இன்னும் நூறு வருடங்களுக்கு குளத்தில் தூர் எடுக்கவோ, தண்ணீரை வெளியேற்றி புதுத் தண்ணீர் மாற்றவோ அவசியமில்லை. இன்னொருமுறை என் வாழ்நாளில், கரசேவா செய்ய வாய்ப்பு இல்லை என்கிறபோது, இந்தத் தடவை கரசேவா செய்ததை பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்" என்கிறார் நெகிழ்ச்சியுடன்.

"நீ அமிர்தசரஸ் போய் என்ன செய்தாய்?" என்று கேட்டோம், நவ்தீப் கௌரின் எட்டு வயது மகள் ஆஷ்பீரிடம். வெட்கத்துடன், "சேறு எடுத்து விளையாடினேன். ரொம்ப ஜாலியாக இருந்தது. என் கையால் சேற்றை எடுத்து, என் அம்மா கையில் போட்டேன்" என்றாள் ஆஷ்பீர்.

"கரசேவாவுக்காக வந்த பக்தர்களுக்குத் தேவையான

பணிகளைச் செய்ய, பிரம்மாண்டமான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். இருபத்து நாலு மணி நேரமும் ரொட்டி, சாதம் என்று அடுப்பு ஓயவில்லை" என்று நவ்தீப் கௌர் சொல்கிறபோதே, "நான் சாப்பிட்டவர்களின் தட்டுகளைக் கழுவினேன் தெரியுமா?" என்று கேட்டாள் சிறுமி ஆஷ்பீர்.

ஆஷ்பீரின் அண்ணன் நவ்ஜோத் சிங், பத்தாம் வகுப்புக்குப் போயிருக்கிறான். "ஏராளமான பெண்கள் உட்கார்ந்து ரொட்டி இட்டுக் கொண்டு இருந்தாலும், நான் அங்கே பார்த்த ரொட்டி தயாரிக்கும் மெஷின் என்னை ஆச்சரியப்படுத்திவிட்டது. பிசைந்த மாவை மெஷினில் ஒரு பக்கம் போட வேண்டியதுதான். இன்னொரு பக்கம் ரொட்டிகளாக வந்து குவிகின்றன. நிமிடத்துக்கு, ஆயிரம் ரொட்டிகள் செய்ய முடியும் என்றார்கள் அங்கிருந்தவர்கள்" என்று தன் வியப்பைப் பகிர்ந்து கொள்ளுகிறான் சிறுவன் நவ்ஜோத்சிங்.

சீக்கிய குருமார்கள், நன்கொடையாய் வழங்கப்பட்ட ஐந்து தங்க மண்வெட்டிகளால் சேற்றை எடுத்து, வெள்ளியில் செய்யப்பட்ட மண் எடுத்துச் செல்லும் பாண்டியில் போட்டுக் கரசேவாவைத் துவக்கி வைத்தார்கள். கரசேவாவை டெலிவிஷனில் 'லைவ்' ஆக ஒளிபரப்பினார்கள். பணி துவக்கப்பட்டபோது, அமிர்தசரஸ் ஏவியேஷன் கிளப் உறுப்பினர்கள், வானிலிருந்து ரோஜா இதழ்களைத் தூவ ஏற்பாடு செய்திருந்தது புதுமையாக இருந்ததாம். இன்னொரு பக்கம் இலவசமாக இருபத்திநாலு மணி நேரமும் டீ வழங்கப்பட்டதாம்.

"பக்தர்கள் பலரும் குளத்திலிருந்து புனித நீரையும், புனித மண்ணையும் எடுத்துச் சென்றார்கள். இதுதான் தங்கக் கோவில் குளத்தின் புனித மண்" என்று நம்மிடம் காட்டினார்கள், சிஷ் பால் சிங் தம்பதியினர்.

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி
புகைப்படங்கள் : கௌதம் ராம்

# கருணாஸ் கலக்கல்

## ■ நாற்பது தொகுதிகளில் யாருக்கு வெற்றி? ■

'தேர்தலுக்கு நெருக்கத்தில் கருத்துக் கணிப்பு முடிவுகளை வெளியிடக் கூடாது' என்று தேர்தல் ஆணையம் தடைவிதித்துவிட்டது. நமக்கோ நாற்பது தொகுதிகளில் வெற்றி வாய்ப்பு யார் பக்கம் என்பதை, துல்லியமான சர்வே மூலம் வாசகர்களுக்குச் சொல்லாவிட்டால் தூக்கம் வராது என்ற நிலை. களத்தில் இறங்கியபோது "கருத்துக் கணிப்பு ஒன்றும் காமெடி அல்ல! பொருத்தமான ஆளைப் பிடித்து பொறுப்பை ஒப்படைத்துவிடு!" என்று ஓர் அசரீரிக் குரல்.

அரசியல்வாதிகளை விட, காமெடி நடிகர்கள் ரொம்பவே சீரியஸ் பார்ட்டிகள் என்பதால், காமெடி கிங் கருணாசை, படப்பிடிப்பில் மடக்கினோம். அவ்வளவு தான்! "கருணாஸ் கருத்துக்கணிப்பு நடத்தலேன்னா, கடவுளால் கூட தமிழ் நாட்டைக் காப்பாத்த முடியாது" என்று டயலாக் பேசிவிட்டு, 'கால்ஷீட் மொத்தத்தையும் கேன்சல் பண்ணிடறேன்' என்றபடி நம் காரில் ஏறியவர், பாண்டி பஜார், ரேமாண்ட் ஷோரூமுக்கு வண்டியை விடச் சொன்னார். உள்ளே நுழைந்தவர், திரும்பி வந்தபோது, சூப்பரான கோட் சூட்டில் பிரணாய் ராய் போலத் தெரிந்தார்.



ஆஹா! அசத்தப் போகிறார் என்று பணிவோடு காரின் கதவைத் திறந்து விட்டால், மனிதர் ஏறவில்லை. பரபரப்பான டிராபிக் நடுவே, ஃபுட்பால் பிளேயர் போல, லாகவமாய் ஊடுருவி, எதிர்த்த பிளாட்பாரத்தில் கடை விரித்திருந்த கைரேகை ஜோதிடரிடமிருந்து, லென்சை இரவல் வாங்கி வந்தார். சாலை ஓரத்தில் சவாரிக்காக நின்று கொண்டிருந்த ஆட்டோ டிரைவர், கோடம்பாக்கம் சிவாவை நெருங்கி, அவரது முகத்திற்கு நேராய் லென்சைப் பிடித்து, நோட்டம் பார்த்தார். சிவா தமது மூன்றாவது கண்ணைத் திறக்காதது தான் பாக்கி. "யோவ்! என்னைய்யா பண்றே! சொல்லிட்டுப் பண்ணு... படத்துலேதான் உன் ரவுசு தாங்கலேன்னா, பப்ளிக் லேயுமா?" என்று அதட்ட, "தம்பி! தமிழகத்தின் எதிர்காலமே! தென் சென்னைத் தொகுதியில் உனது வோட்டு யாருக்கு என்று அறியவே, முகத்தின் வழியே உன் மூளையை ஊடுருவிப் பார்த்தேன்" என்று கருணாஸ் உடான்ஸ் விட, உஷாரானார் சிவா. "உன்னோட வோட்டு யாருக்குன்னு முகத்தைப் பார்த்துக்கேளு, சொல்றேன்" என்றவர், "நான் ரஜினி மன்றத்துலே தீவிர உறுப்பினர். ஆனா பாரம்பரியமா எங்க வீட்டுலே சூரியனுக்குத்தான் வோட்டுப் போடுவோம். போதுமா!" என்றதும், முதல் முயற்சியே வெற்றி பெற்றதில், கருணாஸின் முகம் இந்தியாவை விட ஒளிர்ந்தது!

அடுத்தடுத்து கண்ணில் பட்டவர்களிடமெல்லாம் கருத்துகளை வசூல் செய்த கருணாஸ், நம் முகத்தை இறுதியாக நோக்கினார்.

"டி.ஆர். பாலு இரண்டு லட்சத்து நாற்பதாயிரத்து நூத்து எண்பத்து நாலு வாக்கு வித்தியாசத்துலே ஜெயிப்பார்" என்று அடித்துச் சொன்னார். நமக்கோ தலை கிறுகிறுத்தது. "அதெப்படி லீடிங் வாக்குகளைக்

# சர்வே!




• பூக்கார சாந்தியுடன்...

• ஆட்டோ சிவாவுடன்...

கூட இத்தனை துல்லியமாச் சொல்றீங்க?'' என்றால், ''அதுதான் கருணாஸ்! பிரனாய் ராயெல்லாம் என்கிட்டே பிச்சை வாங்கணும். அந்த சூப்பர் டெக்னிக் பற்றி கடைசியில் சொல்றேன்'' என்றபடி, அடுத்த தொகுதி, மத்திய சென்னை என்று புரசைவாக்கத்திற்கு விரையச் சொன்னார்.

சீரியஸ் முகபாவத்தோடு சிந்தித்துக் கொண்டிருந்த கருணாஸிடம், 'இப்போது அடல்ஜி அலையா? சோனியா அலையா?' என்று வழியில் கலந்துரையாடலை ஆரம்பித்தோம். ''எனக்கு சிம்பு நடிச்ச



அலை தான் தெரியும்" என்றார்.

"ஒவ்வொரு கூட்டணியிலேயும் நடிகர்களைவிட, நடிகைகள் போட்டிப் போட்டுக்கிட்டு சேர்வதைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?"

"நாங்கள் ஆட்சிக்கு வந்தால், கவர்ச்சிகரமான திட்டங்களைச் செயல்படுத்துவோம்னு சொல்றாங்களே! நீங்க கவனிக்கலையா! இதையாவது மன்னிச்சுடலாம். நடிகர் நடிகைகளைவிட, சினிமா பாடகர்களை அதிகம் சேர்த்துட்டு 'தேசிய ஜனநாயக முன்னணி'னு பேர் வச்சிருக்கிறதைத்தான் தாங்க முடியலை."

"அப்புறம் எப்படிப் பெயர் வைக்கணும்ன்னு நினைக்கிறீங்க?"

"தேசிய ஜனநாயகப் பின்னணி'ன்னு வெச்சிருந்தா, எவ்வளவு பொருத்தமா இருந்திருக்கும்?"

"அடேங்கப்பா! அசத்துறீங்க கருணாஸ்."

"பின்னே என்ன சார்! கட்சி அலுவலகத்துக்கு பழுது நீக்க வந்த எலெக்ட்ரீஷியனுக்கு பயங்கர ஷாக்! காரணம், கட்சியிலே அவரையும் சேர்த்துட்டாங்க! அவர் எத்தனை கட்சியிலே தான் உறுப்பினரா இருப்பார்?"

• இந்த சர்வே போதுமா?...



... இன்னும் கொஞ்சம் வேணுமா?

"தேர்தல் நேரத்துலே இதையெல்லாம் கண்டுக்காதீங்க! கிடைச்ச வரைக்கும் ஆதாயம்னு ஆள் பிடிக்கிறது அரசியல்வாதிகளுக்கு கைவந்த கலை."

"ஆனா, இந்தத் தேர்தல்லே நாமக்கல் கோழி வியாபாரிகளுக்குத்தான் அதிக ஆதாயம்!"

"என்ன சொல்றீங்க கருணாஸ்?"

"பறவைக் காய்ச்சல்லே படுத்துக் கிடந்த சிக்கன் வியாபாரம், தொண்டர்களுக்கு பிரியாணி சப்ளை செய்ய வேண்டிய கட்டாயத்தாலே எழுந்து உட்கார்ந்துடுச்சி... இப்போ எல்லா கட்சி எலெக்ஷன் பூத்லேயும் காலை ஏழு மணிக்கே பிரியாணி கிடைக்குதுன்னா பாருங்க!" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே புரசை வந்துவிட, பட்டென்று கீழே இறங்கி, பிளாட்பாரத்தில் பூக்கடை வைத்திருந்த சாந்தியிடம், "அக்கா, உங்க வோட்டு யாருக்கு?"என்று சர்வேயை ஆரம்பித்தார்...

"அம்மாவுக்குத்தாங்க போடுவேன். தவிச்ச வாய்க்கு லாரியிலே தண்ணி கொண்டாந்து ஊத்துற மவராசிக்கு நன்றி மறக்கலாமுங்களா?" என்றார். அதே பகுதியில் வாட்ச்மேன் வேலை செய்யும் பெரியவர் அழகனை அமுக்கி, "உங்க வோட்டு யாருக்கு?" என்று கருணாஸ் கேட்க, அழகனின் முகம் கோபத்தில் அஷ்ட கோணலாய், மாறியது. "நாலுகொடம் தண்ணிக்கு மேலே தரமாட்டேன்கிறான். அதுவும் இரண்டு நாளைக்கு ஒரு தரம் தான் லாரியே வருது. வந்தாலும் குடத்துக்கு நாலணான்னு வசூல் பண்ணினவனுங்க, இப்போ எட்டணாங்கிறான்... தவிச்ச வாய்க்குத் தண்ணீர் தரமுடியாத அதி.மு.கவுக்கு வோட்டுப் போட மாட்டேன்! ஸ்டாலின் மேயரா இருந்தப்போ இப்படியெல்லாம் நடந்துச்சா?" என்று கடுகடுக்க, கருணாஸ் எம்.ஆர்.ராதா குரலில், "என்ன உலகமடா இது! ஒரு டீ.வியிலே காலிக் குடத்தோட பெண்கள் அலையறதைக் காட்டுறான். இன்னொரு டீ.வியிலே, லாரியிலே தண்ணீர் பிடிச்சுகிட்டு, பெண்கள் சிரிச்சுகிட்டே போறதைக் காட்டுறான். தண்ணீர்ப் பிரச்னை இந்தத் தேர்தல்லே பெரிய இஸ்யூவாப் போச்சு! நம்ம சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் அண்ணாச்சிகூட, காவேரி ஆணைய தீர்ப்பு பத்தி கமுக்கமா இருந்துட்டு, கங்கை காவேரி இணைப்புன்னு டயலாக் வுடுறார்" என்று புலம்பியவரை உலுக்கி, "மத்திய சென்னை வெற்றி வாய்ப்பு யாருக்கு?" என்றோம்.

"ஒரு லட்சத்து முப்பத்தேழாயிரத்து முன்னூற்று நாற்பத்தொன்பது வாக்கு வித்தியாசத்திலே தி.மு.க. ஜெயிக்கும்" என்று மீண்டும் துல்லிய லீடிங் தந்தார். வடசென்னை முழுக்க ஒரு ரவுண்ட்

வந்த கருணாஸ், "தி.மு.க. வேட்பாளர் செ. குப்புசாமிக்கு, ஒரு லட்சத்து ஐம்பத்தொன்பதாயிரத்து ஏழுநூற்று எண்பத்தொன்பது வாக்குகள் லீடிங் கிடைக்கும்" என்றார்.

''என்ன கருணாஸ், காமெடி பண்றீங்க'' என்றால், ''இது என்ன பிரமாதம்! தமிழ்நாடு முழுக்க சுற்றுப் பயணம் போகாமலேயே ஒவ்வொரு தொகுதியிலேயும் இருக்கிற என் ரசிகர் படையை விசாரிச்சு, மீதி முப்பத்தேழு தொகுதியிலேயும் யாருக்கு வெற்றிங்கிறதை துல்லியமா சொல்லிடறேன் பாருங்க'' என்றபடி தமது செல்ஃபோனில் பேச ஆரம்பித்தார். பேசினார், பேசினார், பேசிக்கிட்டே இருந்தார். அப்புறம் காகிதங்களில் எண்களைக் கிறுக்கி கொஞ்சம் கணக்குப் போட்டார். பொறுமையிழந்து போன நாம், கருத்துக் கணிப்பை பாதியில் கைவிட்டுவிட்டுக் கிளம்பலாம் என்று முடிவெடுத்த போது, கருணாஸ் விடுவதாக இல்லை. மீண்டும் துல்லியமான லீடிங் வாக்குகளோடு வெற்றி பெறும் வேட்பாளர்களின் பட்டியலை, நம் கைகளில் திணித்து விட்டு, வெற்றிச் சிரிப்போடு நம்மைப் பார்த்தார். இடப் பற்றாக்குறை காரணமாக அவர் தந்த லீடிங் வாக்குகளைத் தவிர்த்து விட்டு, எந்தக் கட்சிக்கு எந்தெந்த தொகுதிகளில் வெற்றி என்பதைக் கீழே படியுங்கள்.

**தி.மு.க:** வடசென்னை, மத்திய சென்னை, தென் சென்னை, ஸ்ரீபெரும்புதூர், கடலூர், கரூர், திருப்பத்தூர், பெரம்பலூர், தஞ்சை, நாகை, புதுக்கோட்டை, இராமநாதபுரம், திருசெந்தூர், திருச்செங்கோடு, கிருஷ்ணகிரி

**அ.தி.மு.க:** பழனி, திண்டுக்கல், பெரிய குளம், திருநெல்வேலி, ராசிபுரம்

**காங்கிரஸ்:** மயிலாடுதுறை, சேலம், நீலகிரி, கோபி

**பா.ம.க:** செங்கல்பட்டு, அரக்கோணம், சிதம்பரம், பாண்டிச்சேரி, திண்டிவனம்

**ம.தி.மு.க:** வந்தவாசி, திருச்சி, சிவகாசி, பொள்ளாச்சி

**பா.ஜ.க:** தருமபுரி, கோவை, நாகர்கோவில்

**இதர கட்சிகள்:** மதுரை - சி.பி.எம், வேலூர் - முஸ்லீம் லீக், தென்காசி - சி.பி.ஐ. சிவகங்கை - காங்கிரஸ் ஜனநாயகப் பேரவை.



• பாகை அழகரோடு...

'தி.மு.க. தலைமையிலான கூட்டணிக்கு முப்பத்து இரண்டு இடங்களும், அ.தி.மு.க. தலைமையிலான கூட்டணிக்கு எட்டு இடங்களும் கிடைக்கும்' என்று கருணாஸ் இத்தனை துல்லியமாக சர்வே செய்து தந்ததை நம்புவது கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. என்றாலும், அவரது சூப்பர் டெக்னிக் ரகசியத்தைத் தெரிந்து கொண்டால்தான், கருத்துக் கணிப்பை வெளியிட ஆசிரியரிடம் அனுமதி கிடைக்கும் என்பதால், 'தயவு பண்ணி ரகசியத்தை வெளியிடுங்க' என்று கேட்டுக் கொண்டோம்.

''அது சூப்பர் டெக்னிக் இல்லே, ரொம்ப சிம்பிள் டெக்னிக்'' என்றபடி ரகசியத்தை உடைத்தார்.

"நான் லீடிங் வாக்குகள் சொன்னது கருத்துக் கணிப்பு இல்லை தலைவா, கடந்த நான்கு நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகளை காப்பியடிச்சுச் சொன்ன கலாய்ப்புக் கணிப்பு'' என்றாரே பார்க்கலாம்! நமக்குத் தலை கிறுகிறுத்தாலும், தேர்தல் கமிஷன் நடவடிக்கையிலிருந்து தப்பிவிட்ட நிம்மதி!

யார் கண்டது, கருணாஸ் தந்த இந்த கலாய்ப்புக் கணிப்புகளே, நாளைய தேர்தல் முடிவுகளாகவும் இருக்கலாம் அல்லவா?

தொகுப்பு : ஆர்.சி.ஜெயந்தன்
படங்கள் : சண்முக சுந்தரம்

# சிவப்பு அரிசிக் கிடங்கு

■ சுதா மூர்த்தி ■

ஒவ்வொரு வருடமும் நம் தேசம் ஏதாவது ஒரு வகையில் இயற்கையின் சீற்றத்தை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. குஜராத்தில் நிலநடுக்கம்; இல்லாவிட்டால், ஒரிசாவில் வெள்ளப் பெருக்கம்; அப்புறம் கர்நாடகத்தில் வறட்சி! ஓர் ஏழை நாட்டில் இம்மாதிரி அவலங்கள் பெரிய அளவில் பாதிப்பை உண்டாக்கி விடுகின்றன.

என்னுடைய பணிக் காலத்தில், இம்மாதிரியான இயற்கைச் சீற்றங்களுக்குப் பிறகு, பலரும் நிதியுதவி செய்யவும், பொருள்களாக வழங்கவும் முன்வருவதைப் பார்த்திருக்கிறேன்.

சில வருடங்களுக்கு முன், பெங்களூரில் பிரபல நிறுவனம் ஒன்றில், வியாபார அமைப்புகளுக்கு இருக்கும் சமுதாயக் கடமை பற்றிப் பேச அழைக்கப்பட்டேன். பேசுவது எளிது. ஆனால், எத்தனை பேர் அங்கு என் பேச்சைக் கேட்ட பிறகு தங்கள் பொறுப்புகளை உணர்ந்தார்கள் என்பது தெரியாது.

என்னுடைய சொற்பொழிவு முடிந்ததும், நான் நிறைய இளைஞர்களிடமும் பெண்களிடமும் பேசினேன். அது ஒரு லாபகரமான நிறுவனம். ஊழியர்களும் நல்ல வசதியானவர்கள். அலங்காரமாக உடை உடுத்திக் கொண்டிருந்தார்கள். சொற்பொழிவைக் கேட்ட பிறகு உணர்ச்சிவசப்பட்டிருந்தார்கள்.

"நாங்கள் ஒவ்வொரு மாதமும் புதுப் புது உடைகள் வாங்குகிறோம். நிலநடுக்கத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு எங்கள் பழைய உடைகளைக் கொடுக்கலாமா? நீங்கள் அதற்கு முயற்சி எடுத்துக் கொண்டு உதவ முடியுமா?" என்று கேட்டார்கள். இன்னும் சிலர் வேறு பொருள்களைத் தர முன்வந்தார்கள்.

"எங்களுக்கு வளர்ந்து விட்ட குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்களுடைய விளையாட்டுச் சாதனங்களையும், சில பாத்திரங்களையும் நாங்கள் கொடுக்க விரும்புகிறோம்" என்றனர் இன்னும் சிலர்.

இதை எல்லாம் கேட்க எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இலங்கைக்கு இராமர் பாலம் கட்டும் போது, அணில் உதவிய கதை நினைவுக்கு வந்தது.

"உங்கள் மூட்டைகளை என் அலுவலகத்துக்கு அனுப்பி வையுங்கள். நான் உரிய இடத்துக்கு அவற்றைச் சேர்ப்பித்து விடுகிறேன்" என்றேன்.

ஒரு வாரத்தில், என் அலுவலகம் முழுக்க மூட்டைகள் நிரம்பி விட்டன. என் சொற்பொழிவு ஏற்படுத்திய தாக்கத்தை எண்ணி, எனக்குப் பெருமையாக இருந்தது.

ஒரு ஞாயிற்றுக் கிழமை என் உதவியாளர்களுடன் அந்த மூட்டைகளை எல்லாம் பிரித்துப் பார்த்தேன். அதிர்ச்சியில் எங்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. மூட்டைகளில் எல்லாம் உபயோகமற்ற, தூக்கி எறியக்கூடிய சாதனங்களாக இருந்தன! குதிகால் உயர்ந்த செருப்புகள் (அதிலும் ஜோடியாகக் கூட இல்லை), கிழிந்து போன உள்ளாடைகள், துவைக்கப்படாத ஷர்ட்டுகள், மிக மெல்லிய, மலிவான புடைவைகள், வண்ணமோ உருவமோ இல்லாத பொம்மைகள், உபயோகிக்கத் தகுதியற்ற படுக்கை விரிப்புகள், அலுமினியப் பாத்திரங்கள், உடைந்து போன காசட்டுகள், என்று மலை போலக் குவிந்திருந்தன. பயன்படுத்தக்கூடிய அளவில் ஒரு சில சட்டைகளும், புடைவைகளும் மட்டுமே இருந்தன.

4




எனக்குச் சிறு வயது நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது. என் தாத்தா பாட்டி அதிகம் பயணம் செய்ததில்லை. கர்நாடகத்தை விட்டே வெளியே போனதில்லை. ஆனாலும் கடுமையாக உழைப்பார்கள். யாரிடமிருந்தும் எதையும் எதிர்பார்க்க மாட்டார்கள். அவர்களுடைய புகைப்படங்கள் எதிலும் வெளியானதில்லை. அவர்கள் செய்த பணிகளுக்காக மேடை ஏறிப் பரிசுகளும் பெற்றதில்லை. வனங்களில் பூத்துக் குலுங்கி வாசனை பரப்பும் மலர்களைப் போல, வெளியாருக்கு அறிமுகம் ஏதுமில்லாமல் வாழ்ந்து வந்தார்கள்.

கிராமங்களில் நெல் வயல்கள் இருந்தன. அரிசியை வீடுகளில் இரண்டு கிடங்குகளில் சேமிப்போம். வீட்டுக்கு முன்னால் ஒன்றும், பின்னால் ஒன்றுமாக அவை இருக்கும். நல்ல தரமான வெள்ளை நிற அரிசியை முன்னால் உள்ள கிடங்கிலும், பின்னால் உள்ளதில் தடித்த, சிவப்பு அரிசியையும் சேமிப்போம்.

அந்தக் காலத்தில் சமூகத்தில் பிரிவுகள் இருக்கவில்லை. பல வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் ஒற்றுமையாக, அமைதியாக வாழ்ந்து வந்தார்கள். பலரும் எங்கள் வீட்டுக்கு வந்து உதவிகள் கோருவதுண்டு. முஸ்லிம் சாமியார்கள், ஹிந்து தாசர்கள், எல்லம்மா ஜோகதியர்கள், ஏழை மாணவர்கள் என்று எல்லோருமே வருவார்கள்.

வீட்டில் பணமாக அதிகம் வைத்திருக்க மாட்டோம். அதனால் என்



அரிசியை ஏன் இரவு நாம் சாப்பிட்டு விட்டு, நன்றா யிருக்கும் அரிசியை தானம் செய்ய வேண்டும்?"

என் பாட்டி, கிருஷ்டக்கா அப்போது சொன்ன பதில், என் உள்ளத்தில் அப்படியே பதிந்து போய் விட்டது :

"குழந்தே எப்போதும் யாருக்காவது ஏதேனும் கொடுக்க விரும்பினாலும் நல்லதைக் கொடு. நன்றாக இல்லாததை அல்ல. அதைத்தான் நான் என் வாழ்க்கையில் கற்றிருக்கிறேன். ஆண்டவன் கோயிலிலோ, சர்ச்சிலோ, மசூதியிலோ இல்லை. அவன் மக்களில் இருக்கிறான். அவர்களுக்கு நீ உதவினால், ஆண்டவனுக்கே சேவை செய்த மாதிரி."

என் பாட்டி இன்னும் விரிவாக இதை எடுத்துச் சொன்னாள்.

"நம்முடைய முன்னோர்கள், ஐயாயிரம் வருடங்களுக்கு முன்னால், வேதத்தில் வெகு எளிமையாகச் சொல்லி வைத்திருக்கிறார்கள் : கொடுக்கும் போது அன்பான வார்த்தைகளோடு கொடு. மகிழ்ச்சியுடன் கொடு. மனம் ஒப்பிக் கொடு. தேவையானவர்களுக்கு மட்டுமே கொடு. எதையும் எதிர்பார்த்துக் கொடுக்காதே; அது பரிசு அல்ல, கொடுப்பது உன் கடமை. உன் மனைவியின் சம்மதத்தோடு கொடு. உன்னைச் சார்ந்து இருப்பவர்களைப் பரிதவிக்க விட்டு விட்டு, வெளியாருக்கு உதவ முற்படாதே. ஜாதி - மதம் பார்க்காமல் தானம் கொடு. பெறுகிறவர் வளம் பெற்று வாழ வேண்டும் என்ற நினைப்போடு கொடு."

தாத்தா அவர்களுக்கு உதவுவதெல்லாம் அரிசியாகத்தான். உதவி பெறுகிறவர்கள் அதிகம் பேச மாட்டார்கள். அரிசியை வாங்கிக் கொண்டு, புன்னகை செய்து விட்டு, வலக் கரத்தை உயர்த்தி ஆசி வழங்குவார்கள், அவ்வளவுதான். எந்த மதத்தைச் சேர்ந்தவரானாலும், "கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக!" என்றுதான் வாழ்த்துவார்கள். தானம் செய்த பிறகு, என் தாத்தா வெகு மகிழ்ச்சியாகக் காணப்படுவார்.

நான் அப்போது சின்னப் பெண். அதிக உயரம் கூட இல்லை. முன்புறக் கிடங்கின் முகப்பு மிகவும் தாழ்வாக இருந்ததால், பெரியவர்கள் அதற்குள் நுழைய சிரமப்படுவார்கள். எனவே என்னிடம் ஒரு பக்கெட்டைக் கொடுத்து உள்ளே அனுப்பி விடுவார்கள். அதை அரிசியால் நிரப்பி வெளியில் எடுத்துக் கொண்டு வருவேன். எத்தனை படி வேண்டும் என்று அவர்கள் சொல்லி விடுவார்கள்.

மாலையில் பாட்டி எங்களுக்காகச் சமைக்கத் தொடங்குவார். அப்போது அரிசியை எடுக்க, என்னைப் பின்புறம் சிவப்பு அரிசி சேமித்து வைத்துள்ள கிடங்குக்கு அனுப்பி வைப்பார். நானும் அவளுக்குத் தேவையான அளவு எடுத்துக் கொடுப்பேன். அதை இரவுச் சாப்பாட்டுக்குச் சமைப்பார் பாட்டி.

இந்தப் பழக்கம் பல வருடங்களுக்குத் தொடர்ந்தது. பெரியவளாக வளர்ந்ததும், ரொம்ப நாளாக நினைத்துக் கொண்டிருந்த கேள்வியை, என் தாத்தா - பாட்டியிடம் கேட்டேன்.

"நன்றாகவே இல்லாத சிவப்பு அரிசியை ஏன் இரவு நாம் சாப்பிட்டு விட்டு, நன்றாயிருக்கும் அரிசியை தானம் செய்ய வேண்டும்?"

என் தாத்தாவும் பாட்டியும் சொன்னது, நான் சிறுமியாக இருந்த போது என் மனசில் அப்படியே தங்கி விட்டது. நான் இன்று யாருக்கேனும் ஏதாவது உதவுகிறேன் என்றால், அதற்குக் காரணம் அந்த உத்தமர்களின் உபதேசங்களே. எந்தப் பள்ளியிலோ, கல்லூரியிலோ கற்ற பாடங்கள் அல்ல அவை.

(தொடரும்)


ஆகவே... உங்கள் பொன்னான சிரிப்புகளை...
''நடிகரை வேட்பாளராக்கினது தப்பாயிடுச்சா... ஏன்?" '''என் படத்தைக் கண்டு களிக்க ரிபீட் ஆடியன்ஸ் வர்ற மாதிரி, எனக்கு வாக்களிக்க ரிபீட் வாக்காளர் வருவாங்க'னு பேட்டி கொடுத்திருக்கார்!"
"என்னது... சினிமா ஷூட்டிங்ல தலைவர் ட்ராலி இழுத்துட்டிருக்கார்?" "இந்தப்பட ஹீரோ, ஹீரோயினை நம்ம கட்சிக்கு இழுக்க அவர் பல வகையில முயற்சி செய்யறார்னு சொன்னேனே!"
"நம்ம கட்சியில வாரிசு அரசியல் குற்றச்சாட்டுக்குத் தலைவர் முற்றுப் புள்ளி வெச்சுட்டாரா... எப்படி?" '''எனக்கும் என் மகனுக்குமிடையே தந்தை - மகன் உறவு அறுந்துவிட்டது... ஆனால் எங்களுக்கிடையே தலைவர் - பொதுச்செயலாளர் உறவு தொடரும்'னு அறிக்கை விட்டிருக்கார்!"

-வசந்தி வள்ளுவன்

# கார்குடல் விஞ்ஞானி!





நன்செய் வயலில் நெல்லே வளராமல் போகும் காலமிது. ஆனால் நெல் வயலில் மீன் வளர்க்கும் சாதனையைச் செய்து காட்டியுள்ளார் கடலூர் மாவட்டம், கார்குடல் கிராமத்து நகராட்சிப் பள்ளி மாணவி மங்கையர்க்கரசி.

இவர் செய்த இந்த ஆய்வு, லக்னோவின் தேசிய அறிவியல் மாநாட்டிலும் இடம் பெற்று, 'இளம் விஞ்ஞானி' பட்டமும் வாங்கித் தந்துள்ளது.

''இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு நெல் வயல்களில் ஏராளமான மீன்கள் இயற்கையாகவே இருந்துள்ளன. உரங்கள் பயன்படுத்த ஆரம்பித்ததும், வயல்களில் மீன்கள் அருகிவிட்டன. செயற்கை உரங்களால் 'கட்லா' என்ற மீன் இனம் பாதிக்கப்படாது என்பதை ஆராய்ச்சியில் கண்டறிந்து, அவற்றை வளர்க்க ஆரம்பித்தோம். இப்போது, கார்குடல் விவசாயிகள் தத்தம் நிலங்களில் மீன் வளர்த்துப் பயன் பெற்று வருகிறார்கள்!'' என்கிறார் பெருமையோடு.

''முதல்கட்டமாக, மதுரையில் நடைபெற்ற அறிவியல் மாநாட்டில், கடலூர் மாவட்டத்திலிருந்து பத்து பள்ளிகள் பங்கேற்றன. அதில் எங்கள் பள்ளி மட்டுமே அரசுப் (தமிழ் வழி) பள்ளி! எங்கள் பள்ளியின் ஆய்வு மட்டுமே லக்னோ தேசிய மாநாட்டில் இடம் பெற்றது'' என்கிறார், இந்த ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்த ஆசிரியர் புகழேந்தி.

- சி. சுந்தர்

படங்கள் : ஜெமினி மணியரசன்



• புகழேந்தி



• மங்கையர்க்கரசி



# அலர்ஜியா? அலறாதீங்க!

அலர்ஜி என்கிற ஒவ்வாமை, மிகச் சாதாரணமாக எல்லோருக்கும் வருகிற ஒன்று. இதற்குக் காரணம் சாப்பாட்டிலிருந்து சருமம் வரை பல உண்டு. இந்த அலர்ஜியைப் பொறுத்தவரை, டாக்டர்களுடைய பங்கு மிகக் குறைவானது. நோயாளிகள்தான் தங்கள் பிரச்னைகளை உணர்ந்து அதைத் தீர்க்க முயல வேண்டும்.

இந்த ஃபுட் அலர்ஜி என்பது என்ன? அது ஏன் எல்லோருக்கும் வருவதில்லை? ஒரு சிலருக்கு மட்டும் வருகிறது? என்கிற கேள்விகள் பலருக்கும் இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட பொருளைச் சாப்பிடுவதால் ஏற்படுகிற தேவையற்ற, விரும்பத்தகாத மாற்றங்களே ஃபுட் அலர்ஜி. இது ஏற்படுகிற நபர்களின் உடலில் இருக்கிற நோய் எதிர்ப்பு நிலையம், மிக மிக சென்சிட்டிவாக இருப்பதுதான் ஒரு சிலருக்கு மட்டும் ஒவ்வாமை ஏற்படுவதற்கான காரணம். இந்த நோய் எதிர்ப்புப் பொருட்கள் (Antibody) அந்த நபர் சாப்பிடுகிற சாதாரண உணவுப் பொருட்களைக் கூட, நோய் உண்டாக்கும் கிருமிகள் என்று நினைப்பதுதான் இதன் அடிப்படை.

இது தவிர Food intolerance என்ற ஒன்றும் இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட உணவைச் சாப்பிட்டால் ஒவ்வாமை ஏற்படுவது. நிறையப்பேருக்கு ஃபுட் அலர்ஜி என்பது ஃபுட் இன்டாலரன்ஸ் என்பதும் ஒன்று என்ற கருத்து இருக்கிறது. அது உண்மையில்லை. உணவு ஒவ்வாமை என்பது அடிப்படையில் அந்த நபருடைய நோய் எதிர்ப்புச் சக்தியை மையமாகக் கொண்டது. 'உணவைத் தாங்க முடியாமை' முழுவதுமாக வேறுவிதமான நிகழ்வு. குறிப்பாக சில குழந்தைகளுக்கு லேக்டோஸ் சாப்பிடுவது சரிவராது. லேக்டோஸ் இன்டாலரன்ஸ் என்பது, மிக மிகச் சாதாரணமாக குழந்தைகளிடம் இருப்பது. இந்தக் குழந்தைகளுக்கு லேக்டோஸைத் தவிர்த்து மற்றவற்றைச் சாப்பிட முடியும். குறிப்பாக தயிர், லேக்டோஸ் நீக்கப்பட்ட பால் போன்றவை. ஆனால் சிலருக்கு பால் சாப்பிட்டால் அலர்ஜி என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்கள் பாலில் தயாரிக்கப்படுகிற எந்த உணவையும் சாப்பிட முடியாது. இது ஃபுட் அலர்ஜி!

எந்த எந்த உணவு வகை அலர்ஜியை உருவாக்கும் என்று தெரிந்து கொள்வது நல்லது. அடிப்படையில் அதிகமான புரோட்டீன் சத்துக்களை வைத்திருக்கிற உணவு வகை சுலபத்தில் அலர்ஜியை ஏற்படுத்தக் கூடியன. அதிலும் கடல் உணவுகள் அலர்ஜியில் மிக முக்கியப் பங்கு வகிக்கின்றன. குழந்தைகளுக்குச் சுலபத்தில் அலர்ஜி வருவது,

• படம் : ஸ்ரீஹரி







முட்டை பால், மீன் ஆகியவற்றால்தான்.

உணவு ஒவ்வாமை ஏற்பட்டால் உடனடியாகத் தோன்றுவது வயிற்றுக் கோளாறு, வாந்தி. வயிற்றுப் போக்கு என்று தொடங்கி சிலருக்கு சருமத்தில் தட்டை தட்டையாக தடிப்புகள் தோன்றும். சிலருக்கு சட்டென்று ஆஸ்துமா மாதிரி வந்து நெஞ்சடைத்துக் கொள்ளும்.

இந்த உணவு ஒவ்வாமையை எப்படிக் கண்டு பிடிப்பது? விலை குறைவான வழி Skin prick test. அந்த உணவின் ஒரு துளி மேலே வைக்கப்படும். பிறகு சருமத்தை இலேசாக சுரண்டி அந்த உணவுப் பொருள் மேலும் உள்ளே செல்ல வழி செய்யப்படும். பின் குறிப்பிட்ட நேரம் பொறுத்து, சருமத்தில் என்னவிதமான மாற்றங்கள் ஏற்படுகிறது என்று கவனிக்கப்படும். ஒவ்வாமை ஏற்படுத்தும் உணவுப் பொருள் இந்த முறையில் சுலபத்தில் கண்டுபிடிக்கப்பட்டுவிடும்.

எப்படி இந்த உணவு ஒவ்வாமையைச் சமாளிப்பது? இந்தக் கேள்விக்கு பெரும்பங்கு ஆற்ற வேண்டியது நோயாளிகள்தாம். உணவு ஒவ்வாமையின் மிக முக்கிய இரண்டு வார்த்தைகள், தவிர்த்தல் மற்றும் மாற்றுதல்.


• சரும அலர்ஜி

எந்த உணவு ஒவ்வாமை ஏற்படுத்துகிறது என்று தெரிந்து கொண்டபின், அதை முற்றிலுமாகத் தவிர்த்து விடுவது. உதாரணமாக மீன் அலர்ஜி உண்டாக்குகிறது என்றால், நீங்கள் மீனோடு சேர்ந்து நீந்தி விளையாடலாம். மீனை உங்கள் வயிற்றில் நீந்தவிட்டால் போச்சு. சிலருக்கு சாப்பிடுவோம், ஏதாவது வந்தால் டாக்டர்கள் பார்த்துக் கொள்வார்கள் என்ற நினைப்பு இருக்கிறது. நிஜம்தான். இம்மாதிரி அலர்ஜிகளில் டாக்டர்கள் பார்த்துக் கொண்டுதான் இருப்பார்கள். ஒன்றும் செய்ய முடியாது. ஆக, தவிர்த்தல் என்பது நோயாளிகளிடம் இருக்கிறது.

'மாற்று' என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். பால் வகைகள் அலர்ஜி என்றால், அதைத் தவிர்த்துவிட்டு அதே சக்தி கிடைப்பதற்காக சோயா பால் சாப்பிடலாம். இம் மாதிரி ஒவ்வொரு உணவுக்கும் மாற்று எது என்பதைத் தெரிந்து கொண்டு, உணவு முறையை அமைத்துக் கொள்வது நல்லது.

நம் ஊரில் சிலருக்கு ஆபீஸுக்கு வந்து வேலை செய்தால் அலர்ஜி வந்து விடும். வேலை செய்யாமல் இருந்தால் நன்றாக இருக்கிற இவர்கள், வேலை செய்யும்போது தடுமாறிவிடுவார்கள். அப்போது பார்த்து தலை சுற்றும், வாந்தி வருவது மாதிரி இருக்கும், வயிறு கடுகடுக்கும், தலைவலிக்கும், பத்து முறை காபி குடிக்கப் போவார்கள். இந்த அலர்ஜியால் அவர்களுக்கு ஏதும் ஆபத்து இல்லை. அவர்களை வேலையில் வைத்திருக்கிற நிர்வாகத்துக்குத்தான் ஆபத்து. இந்த அலர்ஜியைச் சமாளிக்க நிர்வாகம் செய்ய வேண்டியது ஒன்றுதான். மாற்றம்!

(தொடரும்)





# வேதாளம் சொன்ன கதை!

■ பாஸ் ■

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத வாக்காளர், வாக்குச்சாவடிக்குள் நுழைந்து எலெக்ட்ரானிக் வோட்டிங் மிஷினை நெருங்கிய போது, அதனுள் ஒளிந்திருந்த வேதாளம் அவரை நோக்கி எள்ளி நகையாடி, "ஏ வாக்காளனே! ஜனநாயகத்தின் மீது நீ கொண்டிருக்கும் அசாத்திய நம்பிக்கையை நினைத்தால் பரிதாபமாக இருக்கிறது! 'குட ஓலை' முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சி புரிந்த இரண்டு அரசர்களின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள். கதையின் முடிவில் வழக்கம் போல ஒரு கேள்வி கேட்கிறேன். என் கேள்விக்குப் பதில் தெரிந்திருந்தும், நீ கூறாவிடில், உன் தலை சுக்கு நூறாக வெடித்து விடும்!'' என எச்சரித்துக் கதையைச் சொல்லத் துவங்கியது.

முன்னொரு காலத்தில் தந்திரபுரி என்ற ராஜ்ஜியத்தில் தர்மராஜன், சத்தியசிலன் என்ற இரு அரசர்களே மாறி மாறி, தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சியில் அமர்த்தப்பட்டனர்.

ஒருமுறை நடைபெற்ற குட ஓலைத்தேர்தலில் தர்மராஜனைத் தோற்கடித்து சத்தியசிலன் ஆட்சி சிம்மாசனத்தைக் கைப்பற்றினான். சூட்டோடு சூடாக, தர்மராஜன் செய்த அராஜகங்கள், முறைகேடுகளை அம்பலத்தில் ஏற்றும் வேலையில் இறங்கினான் சத்தியசிலன்.

இதற்காகவே சத்தியசிலன் ஏற்பாடு செய்திருந்த சிறப்புப் புலனாய்வுப் படை இரவு பகலாக, கண்ணும் கருத்துமாக வேலை பார்த்து, ஏகப்பட்ட குற்றச்சாட்டுகளை அள்ளி வீசியது. அந்தக் குற்றச்சாட்டுகளைக் குற்றப் பத்திரிகையாகப் பதிவு செய்ய, ஏகப்பட்ட பனை ஓலைகள் தேவைப்பட்டதால், ஒரு கட்டத்தில் பனை ஓலைகளுக்கே பஞ்சம் ஏற்பட்டு, அண்டை நாட்டிலிருந்து பனை ஓலைகள் இறக்குமதி செய்யப்பட்டன! தர்மராஜனின் மீது பல வேறு வழக்குகள் தொடரப்பட்டு, அவன் தந்திரபுரியிலுள்ள எல்லா வழக்காடு மன்றங்களிலும் படியேறி இறங்கியதால், இனி மேல் அவன் முக்காடு போட்டுக் கொண்டு போக வேண்டியதுதான் பாக்கி, என சத்தியசிலன் அகமகிழ்ந்திருந்தான்.

ஆனால் தர்மராஜனோ, முதல்தர வழக்கறிஞர்களின் வியத்தகு சட்ட அறிவோடு, எல்லா வழக்குகளையும் தைரியமாக எதிர்கொண்டான். பல வழக்குகளிலும், தீர்ப்புகளும் தர்மராஜனுக்குச் சாதகமாக வந்த வண்ணமிருந்தன.

இந்த நிலையில், தந்திரபுரிக்கு மீண்டும் தேர்தல் வந்தது. இம்முறை நடைபெற்ற தேர்தலில் தர்மராஜன் அமோக வெற்றி பெற்று, சத்தியசிலனை மண்ணைக் கவ்வச் செய்தான்.

சத்தியசிலன் எதிர்பார்த்தது போலவே, இம்முறை தர்மராஜன் ஏற்பாடு செய்த சிறப்புப் புலனாய்வுப் படை வழக்கம் போல இரவு பகலாக, கண்ணும் கருத்துமாகச் செயல்பட்டு சத்தியசிலன் ஆட்சியின் அராஜகங்கள், முறைகேடுகளை அம்பலப்படுத்தி, பனை ஓலைகளில் குற்றப்பத்திரிகைகளைப் பதிவு செய்தனர்.

தன்மீது வழக்குகள் தொடரப்படலாம் என எதிர்பார்த்து, சத்தியசிலன் முதல்தர வழக்கறிஞர்களின் உதவியை நாடினான். ஆனால், தர்மராஜனோ குற்றப்பத்திரிகைகளைப் பதிவு செய்ததோடு அமைதியானான். சத்தியசிலன் மீது எந்த ஒரு வழக்கும் தொடரவில்லை.

மேற்கண்ட கதையைக் கூறிய வேதாளம், "ஏ வாக்காளனே! பழிக்குப் பழி வாங்குவதுதானே மனித இயல்பு! பிறகு ஏன் தர்மராஜன், சத்தியசிலன் மீது வழக்குத் தொடரவில்லை? உண்மையிலேயே பழி வாங்கும் குணம் தர்மராஜனுக்கு இல்லையெனில், ஏன் குற்றப்பத்திரிகைகளைப்



பதிவு செய்தான்?" எனக் கேட்டது.

வாக்காளர் சிறிதும் சலனமின்றி, "சத்திய சிலன் மீது வழக்குத் தொடர்ந்தால் அவன் அதை எதிர்கொண்டு, ஜெயித்து, தன் மீது தொடரப்பட்டவை பொய் வழக்குகள் என பிரசாரம் செய்து, மக்களின் அனுதாபத் தைப் பெற்று, அடுத்த தேர்தலில் வெற்றி பெற்று விடுவான் என்பதை தர்மராஜன் நன்கு உணர்ந்திருந்தான். அதனால்தான் வழக்குகள் போடவில்லை. ஆனால், அதே சமயம் சத்தியசிலனின் ஆட்சியிலும் அரா ஜகங்கள், முறைகேடுகள் நடைபெறத்தான் செய்தன என்பதை மக்களுக்கு உணர்த்தி, அதன்மூலம் மக்கள் தரும் தண்டனையை, அடுத்த தேர்தலிலும் சத்தியசிலன் பெற வேண்டும் என்பதற்காகவே, அவன் மீது தர்மராஜன் குற்றப்பத்திரிகைகளை மட்டும் பதிவு செய்தான்" என பதில் அளித்தார்.

வாக்காளரின் இந்தப் பதிலால் திருப்தி யடைந்த வேதாளம் ஜிவ்வென மேலே கிளம்பி, மீண்டும் எலெக்ட்ரானிக் வோட் டிங் மிஷினில் அமர்ந்து கொண்டது. ○



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2004

**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே!**
**நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!**

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | – | ரூ.10,000 |
| இரண்டாம் பரிசு | – | ரூ. 7,500 |
| மூன்றாம் பரிசு | – | ரூ. 5,000 |

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர்கள் முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்க மானவை.

***விதிமுறைகள்:***

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுது வதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.



- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட் பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. ஜெராக்ஸ் போன்ற) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை. ஒருவரே எத்தனை கதை கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலை பேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2004' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

ஆசிரியர், கல்கி,
கல்கி பில்டிங்ஸ்,
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

– ஆசிரியர்

# புக்பேங்க்







**முதல் மழை - ஆர். வெங்கடேஷ்**

'காதலுக்காகவும், கல்யாணத்துக்காகவும், ஒருத்தியின் இயல்பைக் கைவிடச் சொல்வது அதர்மம்' - என்று காதலின் சமத்துவத்தையும், கதிரொளியே அறியாத விடியலை நோக்கி காலத்தை அழித்துக் கொள்ளும் போராளிகளையும், லட்சியப் படிப்பை முடித்து கம்ப்யூட்டர்களுடன் குடித்தனம் நடத்தும் யந்திர இளைய சமுதாயத்தையும், தேர்ந்த, சுருக்கமான வார்த்தை வடிவங்களில் கண்முன் நிறுத்தும் கதைகள். பழைய திரைப்படங்களைப் பார்த்த திருப்தி தரும் தொகுப்பு.

**மித்ர ஆர்ட்ஸ் அண்ட் கிரியேஷன்ஸ், 32/9, ஆற்காடு சாலை, சென்னை - 24, விலை: ரூ. 45/-**

**கனவு நிலை உரைத்தல் - இரவி**

கண்ணெதிரே இருப்பவற்றையும், கற்பனையில் பறப்பவற்றையும், கவனிப்பில் கிடைப்பவற்றையும், கவிதை வடிப்பது சுலபம். கவனிப்பில் ஆய்வும் அத்துமீறலும் கொண்ட கவிதைகள் இவை. அந்த அத்துமீறலில் அகப்படுபவை தானேயாயிருந்தாலும், தமிழாயிருந்தாலும், தயங்காத வார்த்தைகளால், வடித்தும் வறுத்தும் எடுத்து விடுகின்றன. வடிவங்களில் இல்லாது வார்த்தைகளில் சிக்கனம் காட்டும் வாழ்க்கைக் கவிதைகள்.

**மதி நிலையம், 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17, விலை : ரூ. 20/-**

**வெற்றி உங்கள் கையில் - (தமிழில் சாருகேசி) ஆர். கண்ணன்**

'காதலிக்கும் வாழ்வு கிட்டவில்லையானால், கிட்டிய வாழ்வைக் காதலித்துப் பார்' - என்னும் பழைய சித்தாந்தம், நடைமுறையில் வேலைக்கும், தொழிலுக்கும்கூட என்னமாய்ப் பொருந்துகிறது! ஆனால் அதிலும், முறையாகத் திட்டமிட்டதெல்லாம், முக்காலும் வெற்றி பெற்றதே என்பதை, முறையாக, சரியாக விளக்கி, ஆகாசக் கோட்டைக்கு அஸ்திவாரம் எப்படிப் போடுவது என்று விளக்கும் வழிகாட்டி நூல். நூல் வழி சென்றால் ஆகாயமும், அங்கிருக்கும் கோட்டையும் நிச்சயமாய் வசமாகும்.

**அருந்ததி நிலையம், 19. கண்ணதாசன் சாலை, தி. நகர், சென்னை - 17. விலை: 35/-**

**தமிழ் இலக்கியத்தில் அறிவியல் சிந்தனைகள் - தொகுப்பு: சிராஜ் உன்னிசா நாசர், லொ.ஆ. உமா மகேஸ்வரி, அபிதா சபாபதி.**

நம் இலக்கியங்கள் மெய்ஞானத்துடன் விஞ்ஞானத்தையும் ஒரு சேர வளர்த்தவைதாம். வானியல், தாவரவியல், மருத்துவயியல், கட்டடயியல், கருவியியல், படைகளிலும் கைவிடு படை, கைவிடாப் படை என்று ரிமோட் கண்ட்ரோல்வரை கூட ஆராய்ந்திருக்கின்றன நம் இலக்கியங்கள், என தேசியக் கருத்தரங்கில் பரிமாறப்பட்ட பல்வேறு அறிஞர் பெருமக்களின் கட்டுரைகளின் தொகுப்பு.

**வானதி பதிப்பகம், 23. தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17. விலை: ரூ. 120/-**

**- விஷ்வக்**



“இதோ நா போயிட்டு கண்டிப்பா புதன்கிழமை திரும்பி வந்துடுவேன்” என கணவர், தாய், தாய்மாமனிடம் சொல்லி விட்டுப் போன செளந்தர்யா, பொய் சொன்னார் என்று பிறகல்லவா தெரிந்தது.

பெங்களூரிலிருந்து சனிக்கிழமை காலை ஜக்கூரிலிருந்து நான்கு இருக்கைகள் உள்ள செஸ்னா 180 ஏர்கிராஃப்டில் செளந்தர்யா, அவரது சகோதரர் அமர்நாத், பி.ஜே.பி கட்சி ரமேஷ்கதம் மற்றும் பைலட் ஜாய் ஃபிலிப் புறப்பட்டனர். டேக் ஆஃப் ஆன சில நொடிகளிலேயே விமானம் தீப்பிடித்து, கீழே விழுந்தது. உள்ளேயிருப்பவர்களைக் காப்பாற்ற அங்கிருந்தவர்கள் கதவைத் திறக்க முற்பட்டபோது, விமானம் தீப்பிழம்பைக் கக்கியது. உள்ளேயிருந்தவர்கள் அடையாளம் காண முடியாதபடி கருகினார்கள். டீ.வியில் பார்த்துக் கொண்டிருந்த லட்சக்கணக் கானோர் பித்துப் பிடித்துப் போனார்கள்.

# சுத்தி சுத்தி வந்தீக...



கன்னடம், தமிழ், தெலுங்கு, மலையாளம்... என தென்னிந்திய மொழிகளில் அநேக திரைப்படங்களில் நடித்தவர் சௌந்தர்யா. அதுவும் தெலுங்கில் நம்பர் ஒன். பேசும் விழிகள், அனாயாசமான நடிப்பு, கௌரவமான தோற்றம், மிதமான கவர்ச்சி என தனி பாணி கொண்டவர்.

**சௌ**ம்யா என்ற இயற்பெயருடைய சௌந்தர்யா, ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். தந்தை சத்யநாராயணா திரைக் கதை எழுதிக் கொண்டிருந்தவர். ஆனால் மிகக் குறைந்த வருமானம். கூடவே பயங்கரக் குடிப்பழக்கம். படிப்பில் சௌந்தர்யா படுசுட்டி. கோலார் தேவ்ராஜ் அர்ஸ் மருத்துவக் கல்லூரியில் முதலாமாண்டு படித்துக் கொண்டிருந்தபோது, சசிகுமாருடன்



''மைனாரிடியினரைக் கவர வேண்டியதுதான். அதுக்காக தலைவர் இப்படி உளரிக் கொட்ட வேணாம்.''

''ஏன், என்ன சொல்லிட்டாரு..?''

''நான் மிக்சர் வாங்கினால்கூட, அதில் மைனாரிடியாக இருக்கும் முந்திரி பருப்பைத்தான் முதலில் விரும்பிச் சாப்பிடுவேன்னு மீட்டிங்ல பேசறாரு!''

- ஆர். ரகோத்தமன்

ஹீரோயினாக அறிமுகமானார். படிப்பை நிறுத்தவில்லை. பிறகு அனந்த் நாகுடன் இரண்டு படங்கள். தெலுங்கு இயக்குனர்களின் பார்வை இவர் மேல் பட, 'ராஜேந்துருடு கஜேந்துருடு', 'மனவராலு பெள்ளி' போன்ற படங்கள் தெலுங்கில் ஹிட்டாக, சௌந்தர்யா சூப்பர் ஸ்டாராகிவிட்டார். சிரஞ்சீவி, நாகார்ஜுனா, வெங்கடேஷ்... போன்ற முன்னணி நடிகர்களுடன் பல ஹிட் படங்களைக் கொடுத்தார். லட்சக்கணக்கான ரசிகர்களைப் பெற்றார்.

தமிழில் 'பொன்னுமணி' சிந்தாமணியாக அறிமுகமானார். அந்தக் குழந்தை முகத்தை மறக்க முடியுமா? 'அருணாசலம்', 'படையப்பா', 'காதலா காதலா' என எல்லாமே சூப்பர் ஹிட் படங்கள். ஆனாலும் தெலுங்கில் இருந்த அளவுக்கு, தமிழில் முன்னணி நட்சத்திரமாக மிளிர முடியவில்லை என்பதே உண்மை.

2002-ம் ஆண்டு சௌந்தர்யா 'த்வீபா' என்ற கன்னடப்படத்தில் நடித்ததோடல்லாமல், தயாரிப்பாளராகவும் மாறினார். ஏகப்பட்ட விருதுகளைக் குவித்தார். சகோதரர் அமர்நாத், சௌந்தர்யாவின் வலதுகரம்.

கடந்த ஏப்ரல் மாதம் உறவினரான ஜி.எஸ். ரகுவை மணந்தார். முதல் கல்யாண நாளன்றே, அவருடைய பத்தாம் நாள் காரியம் என்றால், நெஞ்சு கனக்கிறது.

**பி**.ஜே.பிக்காக தொகுதி பிரசாரத்தில் முழு மூச்சாக இறங்கியிருந்தார் சௌந்தர்யா. சிறு வயதிலிருந்தே ஆர்.எஸ்.எஸ் கொள்கையிலும் ஈடுபாடு கொண்டிருந்தவராம்.

பயணம் செய்த விமானத்தில் ஏதாவது கோளாறா, முறையான லைசென்ஸ் இருந்ததா, என்ஜின் தகராறா... போன்ற பல சந்தேகங்கள் எழுந்துள்ளன.

சௌந்தர்யாவின் தாயின் சோகம் சொல்லவே முடியாத சோகம்! கணவரை 95ல் பறி கொடுத்தார். இப்போதோ மகன், மகள் இருவரையும் ஒரு சேர அக்னிக்குச் சமர்ப்பித்து விட்டிருக்கிறார். விதி!

சரோஜாதேவி, பிரகாஷ் ராஜ், சிரஞ்சிவி, மோகன்பாபு, பாலாஜி, சுதீப்... என ஏகப்பட்ட நட்சத்திரங்கள் சனிக்கிழமை மாலை ஈமச்சடங்கில் கலந்து கொண்டனர்.

சௌந்தர்யாவின் பூர்விக ஊரான முல்பாகலுவில் அப்பா பெயரில் சத்ய நாராயண ட்ரஸ்ட் என ஆரம்பித்து, அங்கிருக்கும் அரசுப் பள்ளிக்கு சில வகுப்பறைகள் கட்டிக் கொடுத்திருக்கிறார். மல்லேஸ்வரத்தில் உள்ள 'அருணசேதனா' என்ற ஊனமுற்ற குழந்தைகளின் நலவாழ்வு மையத்துக்கு, நன்கொடைகள் அள்ளித் தந்திருக்கிறார். முல்பாகல் பள்ளி ஆசிரியர்களும், அருணசேதனா குழந்தைகளும் ஈமச்சடங்களில் கலந்து கொண்டு, இறைபாடல்கள் பாடியது நெஞ்சை நெகிழ வைத்த காட்சி.

**வா**னம் வெறிச்சென்றிருந்தது. ஓர் அழகு தேவதையை அள்ளிக் கொண்ட கவடு கொஞ்சம் கூடத் தெரியவில்லை. ரசிகர்களின் நெஞ்சைச் சுற்றி சுற்றி வந்த நட்சத்திரம் ஒன்று உதிர்ந்து, விழுந்து, கருகியல்லவா போய்விட்டது! சௌந்தர்யாவின் முடிவு சௌந்தர்யமாக இல்லையே... என இதயம் அழுகிறது! அந்த மல்லிகை மறுபடி மாத்தாடுமா?

**- லதா சேகர்**



"22 ஆண்டுகளுக்கு முன்னால்
பிளாட்பாரமில் நான் ஒரு கர்ச்சீப் வியாபாரி.
இன்றோ, பிரபல டெக்ஸ்டைல் ஷோரூமின் முதலாளி."

நன்றி, **சிட்டி யூனியன் பாங்க் !**

வாடிக்கையாளர் தேவைகளைப் புரிந்து கொண்டு, உடனே தகுந்த உதவி புரிவதில் CUB என்றுமே முதலிடம் வகிக்கிறது. தொடர்ந்து வரும் பரிவான சேவையால் வாடிக்கையாளர்களின் இதயத்தில் என்றுமே தனியிடம் பெற்றிருக்கிறது CUB.

வாருங்கள்! கனிவான சேவை செய்ய காத்திருக்கிறது CUB.

- சிறந்த டெபாசிட் திட்டங்கள்
- புதுமையான கடனுதவித் திட்டங்கள்
- நாடெங்கும் 125க்கும் மேற்பட்ட கிளைகள்
- அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி
- கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்ட செயற்பாடுகள்
- குறிப்பிட்ட கிளைகளில் ATM வசதி

1904 2004 100 years
A Legend in Customer Care

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.**

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001, தமிழ்நாடு.
போன் : 0435-2432322 ஃபேக்ஸ் : 0435-2431746
E-mail : cubco_kmb@sanchamet.in Website : http://www.cityunionbank.net

**உங்கள் வளர்ச்சிக்குத் தன்னை அர்ப்பணித்த பாங்க்.**

# நம்ம நினைப்பு

**வாஸந்தி**

### இயற்கையின் ஆட்சிபீடம்

ஸான்பிரான்ஸிஸ்கோ மக்கள் அதிர்ஷ்டசாலிகள் என்று நினைத்து நினைத்து, அங்கிருந்த நான்கு நாட்களும் மாய்ந்து போனேன். கோடையில் கொடைக்கானலில் இருப்பது போல, வருடம் முழுவதும் சிலுசிலுவென்ற மிதமான சீதோஷ்ணம். எங்கு திரும்பினாலும் வண்ண மலர்கள். பசேலென்ற புல்வெளிகள். வளைந்து வளைந்து செல்லும் மேலும் கீழுமான சீரான பாதைகள் மலைப்பிரதேசம் போன்ற உணர்வை ஏற்படுத்தும். ஆனால், அற்புத அழகுடன் பாதுகாக்கப்படும் கடற்கரைகள், ஒவ்வொரு திருப்பத்திலும் நம்மை எதிர்கொண்டு வரவேற்று திக்குமுக்காட வைக்கும். கட்டடக் கலைக்குப் பெயர் பெற்ற ஸான்பிரான்ஸிஸ்கோ மாநகரம், அதன் மிகத் தொன்மையான காடுகளுக்கும் பிரசித்தம். சுவாஸிக்கத் தூய்மையான காற்று, தட்டுப்பாடில்லாத (குழாயிலிருந்து நேராகக் குடிக்க கூடிய) நீர், சுத்தமான, அங்கேயே வளரும் காய்கறிகள், பழங்கள், உள்ளூரில் உற்பத்தியாகும் பால், தயிர், மோர் (இத்தியாதியுடன், அங்கு கிடைக்கும் மீனும் பிரசித்தம்), நேர்த்தியாக இயங்கும் நிர்வாக அமைப்புகள் - மனிதனுக்கு வேறு என்ன வேண்டும்! இங்கிருந்து நாங்கள் எதை முன்னிட்டு இந்தியா திரும்ப நினைக்க வேண்டும் என்று அங்கு தங்கி விட்ட தமிழர்கள் கேட்கும்போது, அவர்களை சர்க்க என்னிடம் சரக்கில்லை. "பார்த்துக் கொண்டே இருங்கள். வெகு விரைவில் தமிழ்நாடு முதன்மை மாநிலமாகப் போகிறது" என்று அவர்களிடம் சொல்லிப்பார்க்கிறேன். அது நையாண்டி வார்த்தைகள் என்று அவர்களாக முடிவுக்கு வந்து, கைகொட்டிச் சிரிக்கிறார்கள். கேவலம் தண்ணீர்ப் பிரச்னையை சமாளிக்கத் தெரியாதவர்கள், முதன்மை ஸ்தானத்தை எப்படி எட்ட முடியும் என்று நகைக்கிறார்கள்.

• சூடா மசால் தோசேய்...



### மேடுகள் காடுகள் கடற்கரைகள்

ஸான்பிரான்ஸிஸ்கோ நகரத்துச் சில பகுதிகளில், வளைந்து செல்லும் தெருக்களின் மேடுகளும், செங்குத்தான சரிவுகளும் திகிலூட்டுபவை. ஆஸ்திரேலியாவில் ஸிட்னியில் இத்தகைய மேடுகளைப் பார்த்திருக்கிறேன். ஆனால் இங்கிருக்கும் அதலபாதாளச் சரிவுகளைப் போல் அங்கு பார்த்ததில்லை. அசோக்கின் ஆட்டோமாட்டிக் சொகுசு கார்கூட, லம்பார்ட் என்கிற பகுதியில் இரண்டாம் கியருக்கு மாற்றப்பட வேண்டியிருந்தது. சில இடங்களில் கிணற்றுக்குள் இறங்குவது

**அமெரிக்க டயரிக் குறிப்பு**

# வருமா?




வாஸந்தியின்
கட்டுரையை
www.kalkionline.comல்
முழுமையாகப்
படிக்கலாம்

• செம்மரக்காடே....

போன்ற உணர்வு வயிற்றைக் கலக்கியது. உலகிலேயே கோணலான தெரு என்பது இங்கு மிகப் பிரசித்தம். பயங்கர செங்குத்தாக இருந்த தெருவை கலபமாகக் கடக்க, குறுக்கும் நெடுக்குமாக சாலைகள் போட்டிருக்கிறார்கள். இருமருங்கிலும் வண்ண வண்ண மலர்ச் செடிகள் பூத்துக் குலுங்குவதால், பூங்காவுக்குள் நடப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. அது இன்று டூரிஸ்டுகளின் முக்கியமான கவர்ச்சி இடமாகிவிட்டது. எல்லோரும் வண்டியில் இருந்து இறங்கி அதில் நடந்து செல்கிறார்கள். நியூயார்க்கர்கள் பெருமையாகச் சொல்வதுபோல ஸான்பிரான்ஸிஸ்கோவையும் பூரணமாக அனுபவிக்க வேண்டுமானால், காலார நடக்க வேண்டும். கடைத் தெருக்களில் நடப்பதும், பல இனத்துக் கலவையான ஜன சமூத்திரத்தை ஆராய்வதும் சுவாரஸ்யமான அனுபவம். இயற்கையும், அமைதியும் வேண்டு



பவர்களுக்கோ, கணக்கிலடங்கா பசுமையான பள்ளத்தாக்குகளும், அடர்ந்த வனங்களும் காடுகளும், ஊருக்கு மிக சமீபத்தில் (இங்கு எல்லோரிடமும் வண்டி இருப்பதால் 50, 60 மைல் தொலைவு என்பது பிரச்னை இல்லை) இருப்பதால் வார இறுதியைக் கழிக்க அநேக இடங்கள் இருக்கின்றன. நான் பள்ளி நாட்களில் படித்த சில மறக்க முடியாத விஷயங்களில், ஸான்பிரான்ஸிஸ்கோவின் ரெட் வுட் ஃபாரெஸ்ட் (செம்மரக் காடுகள்) பற்றின விவரம் முக்கியமானது. அந்த பிரும்மாண்ட மரங்களின் அற்புதப் படங்கள், என் மனத்தில் அழியாத இடம் பெற்றிருந்தன. என்றாவது ஒரு நாள் அவற்றைப் பார்க்க வாய்ப்புக் கிடைக்குமா என்று ஏங்கியிருக்கிறேன். என் கணவரின் 'கோல்டன் கேட்' மயக்கம் போல, எனக்கு இந்தக் காடுகளைப் பற்றின ஆர்வம் நிறைய இருந்தது. மியூர் ரெட் வுட் ஃபாரெஸ்ட் என்ற அந்த 550 ஏக்கரா நிலப்பரப்பில் கால் வைத்ததும், என்னுள் ஏற்பட்ட பிரமிப்பு இன்னும் விலகவில்லை. விண்ணை முட்டும் ஆயிரம் வயது கொண்ட பல நூறு மரங்களின் அடர்ந்த காடு, கற்பனைக்கும் வர்ணனைக்கும் அப்பாற்பட்டது. ஒரு அமானுஷ்ய உணர்வை ஏற்படுத்துவது. சர்வ வியாபியாக, அங்கிங்கென்னாதபடி எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் என்று ஒன்று இருக்குமானால், அதன் தரிசனம் தான் இந்தக்காடு என்று நினைத்தேன். அதன் எதிரில் சர்வாங்கமும் ஒடுங்கிப் போனதுபோல் தேகம் விதிர்த்தது.

காடுகளைத் தொந்திரவு செய்யாதீர்கள், சத்தம் போடாதீர்கள் என்று அங்கங்கே பலகைகள் இருந்தன. உண்மையில் அந்தப் பலகைகளுக்கு அவசியமில்லை என்று நினைத்தேன். அந்த கம்பீரத்துக்கு முன் யாருக்கு பேசத் தோன்றும்? சாரி சாரியாக அந்தக் காட்டுப் பாதையில் வயதானவர்களும் சிறுவர்களும் நடந்த வண்ணம் இருந்தார்கள் இறைவனின் கர்ப்பக்கிருகத்தை வலம் வருவதுபோல. பட்சிகளின் ஓசை மட்டுமே துல்லியமாகக் கேட்டது மந்திரம்போல.

**சரவணபவன்**

சோற்றுப் பானையில் பொன்னைப் பொங்கவைக்கும் கலை, நமது சரவண பவனுக்குக் கைவந்த கலை. ஸிலிகன் பள்ளத்தாக்கில் தமிழோசை எதிரொலிக்க ஆரம்பித்தபின், சரவணபவன் அங்கு வருவதை யாரால் தடுக்க முடியும்? ஸான் பிரான்ஸிஸ்கோவில் எக்கச்சக்கமாக இந்தியக் கடைகளும், உணவகங்களும் பெருகிவிட்டன. ஆனால் சரவண பவன் ஆரம்பித்து இரண்டாண்டுகள் முடிவதற்குள்ளேயே, அங்கு நாளுக்கு நாள் பெருகிவரும் கூட்டத்தைச் சமாளிக்க முடியாமல், பெரிய இடத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். மவுண்டன் வ்யூ என்கிற இடத்தில், கடைத் தெருவின் மையத்தில் அடக்கமான அந்த ரெஸ்டாரண்டுக்கு முன் நிற்கும் கூட்டம் சுவாரஸ்யமான கலவையாக இருக்கிறது.

அடையும் அவியலும், ஆனியன் ரவாவும் வளைய வருகையில், அது அமெரிக்கா என்ற நினைவு சுத்தமாக நழுவிப் போகிறது. சரவண பவனே அங்கு குடியேறிவிட்ட பிறகு, அங்கிருக்கும் நம்மவர்களுக்கு நம் நினைவு ஏன் வருகிறது?

(தொடரும்)

"அப்பா... நானும் ராமுவும் கணக்கில் நூறு..."

"வெரிகுட்... வெரிகுட்..."

"ஆமாம்ப்பா... ராமு 98, நான் ரெண்டு மார்க்குப்பா!"

- எம். அசோக்ராஜா



ஸ்ரீ ராமஜெயம்






# அனிமேஷன் அஞ்சலி!

சிறுமி, கே. புவனேஸ்வரி குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவின் தீவிர ரசிகை. 'கோகுலம்' பாலர் இதழுக்கு, கதை, கவிதை, கட்டுரைகள் எழுதி, 'கோகுலம் மாணவர் அட்டை' பெற்றவர். வளர்ந்து பெரியவளானதும், எம்.எஸ்ஸி. கம்ப்யூட்டர் சயின்ஸ் படித்து, 'காம்கேர் சாஃப்ட்வேர்' என்னும் கம்ப்யூட்டர் நிறுவனத்தை நடத்தி வருகிறார். தமிழில் வெளிவரும் ஒரு கம்ப்யூட்டர் மாத இதழின் ஆசிரியர், காம்கேர் பதிப்பக உரிமையாளர், தமிழ் சாஃப்ட்வேர் தயாரிப்பாளர் என, பல்வேறு முகங்கள் கொண்ட புவனேஸ்வரிக்கு, நீண்ட நாளாக ஓர் ஆசை. தான் எழுத்தாளராகவும், பதிப்பாளராகவும் உயர உதவிய ஆசான் அழ. வள்ளியப்பாவுக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக, அவரது பாடல்களை சி.டி.யில் கொண்டு வர வேண்டும் என்பதுதான். அது சமீபத்தில் நிறைவேறியிருக்கிறது.

'மியாவ், மியாவ் பூனையார்', 'எட்டுக் கோழிக் குஞ்சுகள்', 'குரங்குக் கூட்டம்' போன்ற பொறுக்கு மணி பாடல்களை, உயிரோட்டத்துடன் அனிமேட் செய்திருக்கிறார். வண்ண வண்ண கார்ட்டூன்களின் ஜீவனுள்ள வடிவங்கள், குதூகலிக்க வைக்கும் இசை, உற்சாகமானத் தொகுப்பு, என எல்லாமே பனிரெனத் தாக்கி கண்கள் விரிய வைக்கின்றன.

"இயந்திரமயமாகிவிட்ட வாழ்க்கையில், சந்தமும், நீதியும் கொண்ட அழகு தமிழ்ப் பாடல்களை, குழந்தைகளுக்குச் சொல்லித்தர பெற்றோர்களுக்கு நேரமிருப்பதில்லை. தற்கால பெற்றோர்களுக்கு அதிக அளவில் கதைகளும் பாடல்களும் தெரியாது. அந்தக் குறையைப் போக்கவே, இந்த 'பேரன் பேத்தி பாடல்கள்' சி.டி." என்கிறார் கே. புவனேஸ்வரி.

குழந்தைகளுக்கு பொழுது போக இதைவிடப் பயனுள்ள வழி இருக்கா?

- ஐஸ்

# தருமி பட்ட அவமானம்!



தமக்குத்தாமே மைலாப்பூர் கபாலி கோவில் தெப்பக் குளத்தில் நின்று பேசிக் கொண்டிருந்த கிருஷ்ணசாமி அய்யர்தான், தருமிக்கு இன்ஸ்பிரேஷன்.

கேமரா மேன் சுப்பாராவிடம், "எதுவரைக்கும் லைட்டிங் பண்ணி இருக்கீங்க?'' என்றேன்.

''இந்த மண்டபத்துக்கு லைட்டிங் பண்ணியாச்சு" என்றார்.

"இங்கே ஒரு டிராலி போட்டால், நான் மண்டபத்தில் நுழைந்து, பேசிக் கொண்டே நடந்து, மறுகோடி வரை போய் அங்கே உள்ள படிக்கட்டில் உட்கார்ந்து பேசுவது வரை எடுக்க முடியு மில்லையா?''

"ஓ! தாராளமாய் எடுக்க முடியும்."

அடுத்து, டைரக்டரிடம் திரும்பி, ''சார்! ஒத்திகை வேண்டாம். நேரே டேக் எடுத்திடுங்க'' என்றபோது, அவரும் ஓ.கே. சொன்னார். ஏ.பி. நாகராஜன் எவ்வளவு பெரிய டைரக்டர். அவர் ஒரு சீன் எழுதி, "இதை அவுட்லைனா வெச்சுக்கிட்டு, இஷ்டப்படி சேர்த்துக்கோ!'' என்கிறார். நான் மனசுக்குள்ளே காட்சியை டெவலப் செய்து, ஒத்திகை பார்க்காமலேயே, "டேக் எடுக்கலாம்'' என்று சொல்கிறபோது, அதை டைரக்டர் ஏ.பி.என். ஒப்புக் கொள்கிறார் என்றால், அதற்கு அவர் என் மீது கொண்ட அன்பும், என் திறமைமீது கொண்டிருந்த நம்பிக்கையும்தானே காரணமாக இருக்க முடியும்?

அந்தச் சமயம் பார்த்து செட்டில் இருந்த இருவர் தங்களுக்குள், "சிவாஜி இப்போ வந்திடுவார்,



• ஏ.பி.நாகராஜன்

இல்லை... இல்லை.. வரமாட்டார்.. லேட் ஆகும்" என்று பேசிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. அதையே துவக்கமாக எடுத்துக் கொண்டேன் நான்.

டைரக்டர் ஆக்ஷன் சொல்ல, கேமரா ஓடத் தொடங்கியது. நான், "வரமாட்டான்... வரமாட்டான், நிச்சயம் வரமாட்டான்... எனக்கு நல்லா தெரியும். வரமாட்டான்.'' என வசனம் பேசியபடி

## சிரித்து வாழ வேண்டும் 37

## நாகேஷ்



உள்ளே நுழைந்தேன். மண்டபத்தின் மறு கோடிவரை புலம்பியபடியே நடந்து போய், அங்கிருந்த படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டு, புலம்பலைத் தொடர்ந்தேன். மொத்தத்தையும் ஒரே ஷாட்டில் எடுத்து முடித்தார்.

"ரொம்பப் பிரமாதம்! ரொம்பப் பிரமாதம்!" என்று பாராட்டினார் ஏ.பி.என்.

அடுத்த சில நிமிடங்களில் சிவாஜி பரமசிவனாக மேக்கப் போட்டுக் கொண்டு, கம்பீரமாக செட்டுக்குள் நுழைந்தார்.

சிவாஜிக்கும், எனக்கும் உண்டான காட்சியை விளக்கிச் சொன்னார் ஏ.பி.என்.

''என்ன புலவரே! புலம்புகிறீர்?'' என்றார் சிவாஜி.

''ம்... இதுல ஒண்ணும் குறைச்சல் இல்லை. பேசும்போது, ரொம்ப இலக்கணமா பேசு! ஆனா செய்யுள் எழுதும் போது கோட்டை விட்டுரு!'' என்றேன்.

சிவாஜி, ஏ.பி.என். பக்கம் திரும்பி, "என்ன ஏ.பி.என்., நாகேஷ் பேசறது புதுசா இருக்கு?" என்று கேட்க, 'நீங்க பரமசிவன் சார்! அவர் அன்றாடங்காய்ச்சி புலவர், அவர் லெவல் அவ்ளோதான், ஏதோ புலம்பட்டும் விட்டுடுங்க" என்றார்.

சிவாஜி முன்னால் நடக்க, நான் அவர் பின்னால் நடந்தபடியே வசனம் பேசுவதாகக் காட்சி. எனவே, நான் பின்னால் வசனம் பேசுகிறபோதே, வளைந்து, நெளிந்து ஆக்ஷன் பண்ணுவதை, அவரால் பார்க்க முடியாது. ஒரு வழியாக சொன்ன காலக் கெடுவுக்குள் என் சம்பந்தப்பட்ட காட்சிகளை எடுத்து முடித்து விட்டார்கள்.

சம்பந்தப்பட்ட காட்சிகளுக்கு டப்பிங் பேச வேண்டிய கட்டம் வந்தது. ஏ.பி.என்.னின் தியேட்டரில், டப்பிங்குக்கு சிவாஜி வந்துவிட்டார். நான் அமர்க்களம் பண்ணி இருப்பதாக எல்லாரும் பாராட்டினார்கள். இந்தப் படத்தில் என் நடிப்பு மிகச் சிறப்பாக இருப்பதைப் பார்க்க எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது.

ஆனாலும், எல்லாரும் மிகுந்த சஸ்பென்ஸுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரே விஷயம், காட்சிகளைப் பார்த்துவிட்டு, சிவாஜி என்ன சொல்லப் போகிறாரோ என்பதுதான்.

நானும் டப்பிங் தியேட்டரில் கடைசி வரிசையில் டென்ஷனோடு காத்திருந்தேன்.

திரையில் காட்சி ஓடியது. சிவாஜி பார்த்துக் கொண்டிருந்தார். காட்சி முடிந்தவுடன், ஏ.பி.என்.னைக் கூப்பிட்டார்.

"இன்னொரு தடவை இந்த சீனைப் போடச் சொல்லுங்க" என்றார்.

எதற்காக மறுபடியும் இந்தக் காட்சியைப் பார்க்க வேண்டும் என்கிறார் சிவாஜி என்று எனக்குப் புரியவில்லை.

அவ்வளவுதான்! இந்தக் காட்சி, சிவாஜிக்குப் பிடிக்கவில்லை, தூக்கிவிடுங்கள் என்று சொல்லிவிடப் போகிறார் என்று எனக்குத் தோன்றியது. அந்த நிமிடம், 'அடடே! நம் உழைப்பு முழுவதும் வீண்தானா?' என்ற துக்கம் என் தொண்டையை அடைத்தது. காட்சி முடிந்ததும், ஏ.பி.என், சிவாஜியை நெருங்கினார். "இந்த சீனைத் தூக்கிடுங்க! வேணாம்'' என்ற வார்த்தைகளை சிவாஜியின் உதடுகள் உச்சரிக்கப் போகின்றன என்று எதிர்பார்த்து, என் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டேன். நெஞ்சு படபடத்தது.

"இந்த மாதிரி ஒரு நடிப்பை நான் பார்த்தது இல்லை. நாகேஷின் நடிப்பு

## பேரும் சிக்கல்! கேஸும் சிக்கல்!



அமெரிக்கப் படையினரால் சிறை பிடிக்கப்பட்ட முன்னாள் ஈராக் அதிபர் சதாம் உசேனை எங்கேயோ ஒரு நாட்டில் மறைத்து வைத்து விசாரிக்கப் படுகிறார். சர்வதேச மனித உரிமை கழகம் மூலம், உலக நீதிமன்றத்தில் சதாம் உசேனிடம் விசாரணை நடக்கும்போது அவர் சார்பாக வாதாட, பிரான்சு நாட்டின் பிரபல வழக்கறிஞர் ழாக்வேர்ஷே (பார்த்து உச்சரிங்க. நாக்கு சுளுக்கிக்கப் போகுது) ஆஜராகிறார். பல சிக்கலான வழக்குகளிலிருந்து பலரை விடுவித்த இந்த வக்கீலின் ஒரு நாளைய சம்பளம், நாற்பதாயிரம் யூரோக்கள்.

– பாரீஸ் பார்த்தசாரதி

ரொம்பப் பிரமாதம். தயவு செய்து, இந்த காட்சிகளில் ஒரு அடி கூட கட் பண்ணிடாதீங்க. இந்த சீனை பார்க்கிறவங்க எல்லாரும் பாராட்டுவாங்க. அப்புறம் இன்னொரு முக்கியமான விஷயம். அவன் பொறுப்பில்லாத பயல். டப்பிங் ஒழுங்கா பேசமாட்டான். அவனை கரெக்டா டப்பிங் பேச வையுங்க. ஒழுங்கா டப்பிங் பேசலைன்னா, அவனை வெளியில விடாதீங்க!'' என்று சொன்னார் சிவாஜி டைரக்டரிடம்.

இதையெல்லாம் நானும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். சிவாஜியே பாராட்டினது பற்றி எனக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். அவர் மாபெரும் நடிகர் மட்டுமில்லை; அற்புதமான ரசிகர் என்றும் அன்றைக்குப் புரிந்து கொண்டேன்.

ஒரு பக்கம் இப்படி ரொம்ப சந்தோஷப் பட்டாலும் கூட, மனத்தின் ஒரு மூலையில் துளியூண்டு வருத்தம்.

டைரக்டர் ஏ.பி.நாகராஜனிடம், என் நடிப்பைப் பற்றி அத்தனை புகழ்ந்து பேசின சிவாஜி, என்னிடம் நேரிடையாக, ''படவா! பிரமாதமாய் நடிச்சிருக்கியேடா!'' என்று ஒரு வார்த்தை சொல்லவில்லையே என்பதுதான்.

'திருவிளையாடல்' ரிலீசானது. படம் பிரமாதமாக ஓடி, நூறாவது நாள் விழா கொண்டாடுவதற்கு தடபுடலாக ஏற்பாடுகள் நடந்தன.

விழாவில் சிவாஜிக்கு வைரவாள் தரப் போகிறார்கள். சாவித்திரிக்கு வைர மோதிரம் தரப் போகிறார்கள் என்றெல்லாம் பத்திரிகைகளில் வெளியான செய்தி படித்தேன். நிகழ்ச்சிக்கு முந்தைய தினம், அந்தப் படத்துக்கு அசோசியேட் டைரக்டராகப் பணியாற்றியவர், என்னை வந்து சந்தித்தார்.

அவரிடம் பேச்சோடு பேச்சாக, நான் ஒரு ஐடியாவைச் சொன்னேன். சிவாஜிக்கும் சாவித்திரிக்கும் வைரவாள், வைர மோதிரம் தரப்போகிறார்களாம். அவற்றைத் தருகிறபோது, ''திருவிளையாடலில் தருமிக்கு ஆயிரம் பொற்காசுகள் கிடைக்காமல் போயிருக்கலாம். ஆனால் இந்த விழாவில், நாங்கள், நாகேஷுக்கு பொற்கிழி தருகிறோம்'' என்று சொல்லி, ஒரு மஞ்சள் சுருக்குப் பையைக் கொடுங்கள். பைக்குள்ளே தங்கக் காசுகள் போட வேண்டாம். வெறும் கற்களைப் போட்டாலே போதும். தருமியாக நான் நடித்த காட்சியை ரசித்தது போலவே, இதையும் எல்லோரும் ரசிப்பார்கள்'' என்றேன்.

தலையை ஆட்டிவிட்டுச் சென்றார் அவர். நூறாவது நாள் விழாவில் எனக்கு (கற்கள் போட்ட) பொற்கிழி தருவது போலவும், அரங்கில் இருக்கும் அனைவரும் கைதட்டி ஆர்ப்பரிப்பது போலவும் கற்பனை செய்து கொண்டு, நான் காத்திருந்ததுதான் மிச்சம். எனக்கு விழா அழைப்பிதழே அனுப்பப்படவில்லை!

மனசு நொந்து போனேன். எனக்கு விழாவில் பெரிய கௌரவம் செய்ய வேண்டாம். விழாவுக்கு அழைக்கப்படும் குறைந்த பட்ச மரியாதைகூடத் தரப்படவில்லை. ம்... தருமிக்கு பொற்கிழி கிடைக்காமல் போனது மாதிரி, அந்தக் கதாபாத்திரமாய் நடித்த எனக்கு, படத்தின் நூறாவது நாள் விழா அழைப்பிதழ் கூடக் கிடைக்காமல் இப்படி ஓர் அவமானம்! இதுவும் ஒரு திருவிளையாடல்தானோ?

(தொடர்ந்து சிரிப்பேன்)

# "உங்க பேர் என்ன?"

■ ஆரணி யுவராஜ் ■

மனிதர்களுக்கு உலகிலேயே மிகவும் பிடித்தமான சொல் தத்தமது பெயர்கள்தான் என்று யாரோ சொல்ல, எதிலோ படித்திருக்கிறேன். ஆனால் அனைவருக்குமே இது பொருந்தாது. என்னைப் போல் சில விதி விலக்குகள் இருப்பதுண்டு.

"உங்க பேர் என்ன?" என்கிற கேள்வி, பல முறை என்னை ரொம்பவும் சங்கடப் படுத்தி உள்ளது. அதிலும் பணியின் காரணமாக மாதத்தின் பாதி நாட்கள் ரயிலிலும், பஸ்ஸிலும் பயணிப்பவனுக்கு இது ஒரு சவால்தான்.

பக்கத்து இருக்கையில் வந்து அமர்கிறவனிடம் அந்தக் கேள்வி வராத வகையில் பேச்சை ஆரம்பிக்க வேண்டும். நாமும் அந்தக் கேள்வியைக் கேட்டு விடக் கூடாது. கேட்டால்தானே பதிலுக்கு அந்தக் கேள்வியைக் கேட்பார்கள்?

இந்த ஒரு விஷயத்தில் இந்தியனாகப் பிறந்ததில் ரொம்பவே பெருமைப்படுகிறேன். காரணம், மற்ற நாட்டினரிடம் ஒரு கெட்டப் பழக்கம் இருக்கிறது. முன் பின் தெரியாத இருவர் சந்தித்துக் கொண்டால், முதலில் தங்கள் பெயர்களைச் சொல்லி அறிமுகம் செய்து கொண்டு, பிறகுதான், மற்ற விஷயங்களைப் பேசுவார்கள். நம்மிடம் பெரும்பாலும் அந்த முறையான தொடக்கம் இல்லை.

"ரொம்ப வெயிலா இருக்கில்லே?" என்றோ,

"நீங்களும் சென்னைதானா?" என்றோ தான் ஒருவர் தொடங்குவார்.

எதிரே இருப்பவர் அதை நூல் பிடித்துப் பேச ஆரம்பிப்பார். அரசியல், சினிமா, அது இது என்று விரியும் பேச்சு, பயணம் முடியும் வரை நடக்கும். இறுதியில் இறங்கியும் போய் விடுவோம். இறுதி வரை ஒருவர் பெயர் அடுத்தவருக்குத் தெரியாமலே போய் விடும்.

இன்றும் அப்படித்தான், ரயிலில் நான் ஜன்னலோர இருக்கையில் அமர்ந்திருந்தேன். கையில் சிறிய சூட்கேசுடன் ஒரு காலை விந்தி விந்தி வந்த அவன், பெட்டியில் ஏறி என் இருக்கைக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

நான் சற்று நகர்ந்தேன். அவனைப் பார்த்துப் புன்னகை செய்தேன். அவனும் புன்னகை செய்தான்.

"என்ன ஆச்சு காலுக்கு?" என்று கேட்டேன்.

"ரெண்டு நாளைக்கு முன்னாடி சின்ன ஆக்ஸிடெண்ட்" என்றான்.

இது போதாதா? நூல் பிடித்துச் செல்ல ஆரம்பித்தோம்.

"அடடா எப்படி?"

"ஸ்கூட்டர்ல போயிட்டு இருந்தேன். ஒரு சைக்கிள்காரன் திடீர்னு ரோட்டைக் கிராஸ் பண்ணினான். பிரேக் பிடிக்கறதுக்குள்ளே மோதி, நானும் விழுந்து, அவனும் விழுந்து..."

"நம்ம ஆளுங்களுக்கு எதிலுமே அலட்சியம்தான். எதிர்ல வண்டி வருதா என்னன்னு பார்க்கறதே இல்லை" என்றேன்.

எங்களது பேச்சு சௌகர்யமாக நீண்டது. எதிரே இருந்த இன்னொருவரும் சேர்ந்து கொள்ள, வழக்கம் போல் விலைவாசி உயர்வில் ஆரம்பித்து, நடிகையின் மார்க்கெட் சரிவு வரை பேசலானோம்.

பெயரைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன் அல்லவா? என்னுடைய அப்பா ஒரு கட்சியின் தீவிரமான தொண்டர். தேர்தல் சமயங்களில்



அவரை வீட்டில் பார்ப்பதே அபூர்வம். கட்சிக்காக ஓடியாடி உழைப்பார். என்னமோ இவரே தேர்தலில் நிற்பது போல் இருக்கும்.

அப்பா மளிகைக் கடை வைத்திருந்தார். வீட்டை ஒட்டியவாறு பக்கத்திலேயே கடை. அதனால் அவருக்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. கட்சி வேலையாக அவர் போய் விட்டால், அம்மாவே கடையையும் பார்த்துக் கொண்டு, வீட்டு வேலைகளையும் கவனிப்பாள்.

தூளியில் தூங்கிக் கொண்டிருக்கும் தங்கை அழுவாள். அம்மா என்னை அழைத்து பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுச் சென்று, தங்கையை எடுத்து சமாதானம் செய்வாள். பால் கொடுப்

பாள். அந்த நேரத்தில் கடைக்கு யாராவது வருவார்கள். ஏதாவது கேட்பார்கள்.

அம்மா வாசல் பக்கமாக பார்த்துக் கொண்டேதான் இருப்பாள். பால் கொடுப்பதைப் பாதியிலேயே நிறுத்தி விட்டு ஓடி வருவாள். தங்கையின் அழுகை அதிகமாகி விடும்.

பல சமயங்களில் கடையிலேயே அமர்ந்து பால் கொடுக்க வேண்டிய தாகும்.

அந்த மாதிரி சமயத்தில் அம்மாவின் முகம் கோபமாக இருக்கும். "கட்சி கட்சின்னு நாயா சுத்தறார். அப்படி என்னத்த அள்ளிட்டு வரப் போறாரோ?" என்று முணுமுணுப்பாள்.

எந்தக் கட்சியில் எந்தத் தொண்டன் அள்ளிக் கொண்டு வந்திருக்கிறான்? போட்டு விட்டு வந்தது தானே அதிகம்! தங்களது வாழ்க்கை, முன்னேற்றம், செல்வம், இளமை என்று எல்லாவற்றையும் போட்டுவிட்டு வருவதுதானே வழக்கம்? அப்பாவும் அதையேதான் செய்தார்.

எனக்குப் பெயர் வைத்ததும் அப்படித்தான். அது நாத்திகம் பேசுகிற கட்சி. கடவுளைக் கிண்டலடித்து நகைச் சுவையாகப் பேசி, மக்களைக் கவர்ந்து, கைத் தட்டல்களைப் பெறுவார்கள். வறுமையில் உழலும் ஏழைகளுக்கு தங்களது இல்லாமையை நினைத்து வெட்கமாக இருந்தது. தங்களது இந் நிலைக்கு காரணம் கடவுள்தான் என்று, அவர் மீது கோபம் இருந்தது. அதனால் அவரை ஒருவர் கேலி பேசுவதைக் கேட்டதும், உள்ளூர ஒரு திருப்தி. கைகளைத் தட்டினார்கள்.

அப்பாவும் தீவிர நாத்திகராக இருந் தார். வீட்டில் ஒரு கடவுள் படம் கூட இல்லை.

யாரோ ஒரு பிரசார பீரங்கி ஊருக்கு வந்து மேடையில் முழங்கினா ராம். அப்போது நான் பிறந்து ஒரு வாரம் ஆகியிருந்ததாம். என்னைத் தூக்கிக் கொண்டு போய், "நான் ஒரு பேரை முடிவுச் செய்திருக்கேன். அதை உங்க வாயால் வைக்கணும்" என்றாராம்.

"அதுக்கென்ன வெச்சுட்டாப் போச்சு. என்ன பெயர்?"

"இராவணன்."

# நீங்கள் சமையல் புலியா?



என்ன... ஆமாவா? உங்க கை வண்ணத்தை எல்லாரும் தெரிஞ்சுக்கட்டுமே! உடனே சுலபமா,

அதுதான் என் பெயர். அந்தப் பெயரை வைத்ததில் அம்மாவுக்குக் கோபம். அப்பாவோடு சண்டை பிடித் திருக்கிறாள். அப்பா ரொம்பவும் உறுதி யாக இருந்திருக்கிறார். உறவுகள் வாய்க் குள் சிரித்துக் கொண்டன. பள்ளியிலும் அதே பெயரைத்தான் அப்பா பதிவு செய்தார்.

சக பையன்கள் "டேய் பத்துத் தலை ராவணா, மிச்சம் ஒம்பது தலை எங் கேடா?" என்று கிண்டல் அடிப்பார்கள்.

வீட்டுக்கு வந்து அழுவேன். "எனக்கு ஏம்மா இந்தப் பேரை வெச்சீங்க?"

"எல்லாம் உன் அப்பா வேலை. போய் அந்த மனுஷனையே கேளு" என்பாள் அம்மா.

அம்மா எப்போதும் அந்தப் பெயரில் அழைத்ததில்லை. ராஜா என்று தான் கூப்பிடுவாள்.

காலம் ஓடியது. எனக்குப் பெயர் வைத்த எம்.எல்.ஏ. அடுத்த தேர்தலில் இடம் கிடைக்காததால், கட்சி மாறி, அதிலிருந்து இன்னொரு கட்சிக்குத் தாவி,

சுவையா செய்யக் கூடிய உணவுக்குறிப்பு ஒன்றை எழுதி அனுப்புங்க. ஸ்வீட்டோ, காரமோ சப்புக் கொட்டற மாதிரி இருக்கணும். ஆனால் ஒரு கண்டிஷன்! பால் / தயிர் பயன்படுத்தப்படும் உணவாக இருக்க வேண்டும். உங்கள் புகைப்படத்துடன் 'சமையல் புலி' என்று உறைமீது எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் உணவுக் குறிப்புக்கு ரூ.200/- பரிசு.

கடைசித் தேதி 13.5.2004

நளமகாராஜாக்களுக்கு முன்னுரிமை உண்டு. கரண்டிப் போர் துவங்கட்டும்!

தேசிய நீரோட்டத்தில் கலந்து அமைச்சராகி விட்டார். சமீபத்தில் அவர் ஒரு கோவில் கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டு சிரிப்புடன் கோபுர கலசத்திற்கு பால் ஊற்றுவதை, நாளிதழில் புகைப்படமாகப் பார்த்தேன்.

அப்பாவின் கட்சி மட்டும் என்னவாம்? அதுவும் நிறையவே மாறி இருந்தது. அதன் தலைவர் ரகசியமாக பூஜை செய்வதாகப் பேசிக் கொண்டார்கள்.

அப்பா தம்மைத் தொலைத்திருந்தார். நிறைய இழந்து விட்டார். மளிகைக் கடையில் பெயருக்கு சோப்பு, மஞ்சள் - குங்குமம், மிட்டாய் என்று கொஞ்சமே சரக்கு இருந்தது. இப்போது அப்பா நீண்ட நேரம் கடையில் இருக்கிறார். ஆனால் வியாபாரம் இல்லை.

"கடையை கொஞ்சம் நவீனப்படுத்தி சரக்குகளை வாங்கிப் போட்டா, நல்லா வியாபாரம் ஆகும்ப்பா. நான் பணத்துக்கு ஏற்பாடு செய்யட்டுமா?" என்று முன்பு கேட்டேன்.

"வேணாம்டா. என்னால முன்ன மாதிரி அதிகம் ஓடியாட முடியலை. நீயோ வேலைக்குப் போறே. எனக்கு அப்புறம் யார் செய்யப் போறா? எதுக்கு அநாவசியமா? இதுவே போதும்" என்று சொல்லி விட்டார்.

அப்பா இப்போதெல்லாம் செய்தித் தாள்களில் கூட அரசியல் விஷயங்களைப் பார்ப்பதில்லை. சுத்தமாக வெறுத்துப் போய் இருந்தார்.

திடீரென ஒரு நாள் கேட்டார். "என்னமோ கெஜட்டாமே. அதுல எழுதி பெயரை மாத்திக்கலாம்னு கேள்விப்பட்டேன். நீ உன் பேரை மாத்திக்கறியா?"

நான் அப்பாவை நிமிர்ந்து பார்த்தேன். அவர் முகத்தில் இருப்பது குற்ற உணர்ச்சியா, வேறு ஏதாவதா என்று கண்டுபிடிக்க முடியவில்லை.

"வேணாம்ப்பா. பேரை மாத்தறதால எல்லாம் மாறிடுமா?" என்றேன்.

இந்த வார்த்தைகளைச் சொன்னதில் மனத்தில் ஒரு குரூரமான திருப்தி. உள்ளே படிந்துள்ள ஒருவித பழிவாங்கல். இதற்காகத்தான் சங்கடங்களையும் சகித்துக் கொண்டு, அந்தப் பெயரைச் சுமக்கிறேனோ என்று நினைக்கையில் கொஞ்சம் வெட்கமாகவும் இருக்கிறது.

ரயில் நின்றது. பக்கத்தில் இருந்தவன் சூட்கேஸை எடுத்துக் கொண்டான்.

"ஓ.கே.சார். போயிட்டு வரேன். உங்க பேரைக் கேட்கவே மறந்துட்டேன்" என்று சிரித்தான்.

வழக்கம் போல் மனத்தில் சங்கடப் பந்து மோதி, மெல்ல வார்த்தையைக் கசிய விட்டது.

"ரா..ராவணன்" என்றேன்.

அவன் கண்களில் திகைப்பை எதிர்பார்த்தேன். இல்லை. மாறாக மெல்லப் புன்னகை செய்தான்.

"உங்க அப்பா எதாவது கட்சியின் தொண்டரா?" என்று கேட்டான்.

எனக்கு ஆச்சர்யம்! "ஆ... ஆமா... உங்களுக்கு எப்படி...?"

அவன் மாறாத புன்னகையுடன் சொன்னான்.

"என் பேர் துரியோதனன்!" ●

# 'மணி'ப்புயல் வீசும்

## ▪ தொகுதி விசிட் ▪

"காவிரியைக் கடக்க
ஓடங்கள் தேவையில்லை
ஒட்டகங்கள் போதும்!"

காவிரி டெல்டா பகுதி பாராளுமன்றத் தொகுதிகளில், பொதுத் தேர்தலின் வாக்குப் பதிவுக்கு வெளிச்சம் தந்து கொண்டிருக்கும் இப்புதுக் கவிதை, மயிலாடுதுறை தொகுதியில் பரபரப்பாகப் பயன்படுத்தப்படுகிறது.

'எப்படியும் இந்த நால்வரை வீழ்த்தியே ஆக வேண்டும்' என்று அ.தி.மு.க. தலைவியால் தரப்பட்டிருக்கும் பட்டியலில் இடம் பெறும் ஒருவர் மணி சங்கர் அய்யர். (மற்ற மூவர் : டி.ஆர். பாலு, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், தயாநிதி மாறன்) மயிலாடுதுறை பாராளுமன்றத் தொகுதியில் மணி சங்கர் அய்யர் 1991ல் வெற்றியும், 1996, 1998களில் தோல்வியும், 1999ல் வெற்றியும் பெற்றவர்.

தொகுதி மக்களுக்கு நன்கு பரிச்சயம் ஆனவர். டெல்லியில் வாசம் என்ற போதிலும், குறைந்தபட்சம் மாதம் ஒரு முறையாவது மயிலாடுதுறைக்கு வந்து செல்பவர். வருகின்றபோது ஒரு வாரம், பத்து நாள் எனத் தங்கியிருந்து தொகுதிக்குள் வலம் வருபவர். பேருந்து நிலையம் அருகே எம்.பி. ஆபீஸ் இருக்கிறது. தினந்தோறும் பொது மக்கள் தரும் மனுக்கள், அவை சார்ந்த நடவடிக்கைகள், இயலும் அல்லது இன்ன காரணங்களால் இயலாது என்கிற பதில்கள் அனுப்புவது சம்பந்தமாக, நான்கு நபர் அந்த அலுவலகத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். தொகுதி முழுக்க மணி சங்கர் அய்யருக்கு ஆதரவு அலை வீச இதுவும் ஒரு காரணம்.

1952லிருந்து இங்கு காங்கிரஸ் ஏழு முறையும், த.மா.கா. இரண்டு முறையும், தி.மு.க. மூன்று முறையும் வெற்றி பெற்றுள்ளன. காங்கிரசுக்கு எதிராக அ.தி.மு.க. முதன்முதலாக தன் வேட்பாளரைக் களத்தில் இறக்கியுள்ளது இங்கு. கடந்த சில மாதங்களுக்கு முன்பாக நடந்த அரசு விழா ஒன்றில் முதல்வர் ஜெ.க்கும், தொகுதியின் பாராளுமன்ற உறுப்பினர் மணி சங்கர் அய்யருக்கும் மேடைப் பேச்சில் மோதல் உருவானது. உடனே வெளியேறிச் சென்ற மணி சங்கர் அய்யர் காரைக்கால் பகுதியில் தாக்கப்பட்டார். அதற்கு மறைமுகக் காரணி எனக் கருதப்பட்ட ஓ.எஸ்.மணியன், அ.தி.மு.க. வேட்பாளர். தேர்தலில் மணி சங்கர் அய்யரை வீழ்த்த வேண்டுமென்றே 'அம்மா'வின் அருளாசியுடன் களத்தில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளவர். எவ்வளவு செலவு செய்தாவது ஜெயித்தாக வேண்டுமென்கிற முடிவில், கடுமையாய் உழைத்து வருகிறது ஆளும் கட்சியான அ.தி.மு.க.

மூன்றாவது வேட்பாளராக மக்கள் கூட்டணியின் விடுதலைச் சிறுத்தைகள் சார்பாக, ஜோ. இராஜன் போட்டியிடுகிறார். தொகுதி வாக்காளர்களில் முப்பது சதம் தலித்துகள்.

மயிலாடுதுறை பாராளுமன்றத் தொகுதிக்குட்பட்ட குத்தாலம், திருவிடைமருதூர், சீர்காழி, பூம்புகார் ஆகிய சட்டமன்றத் தொகுதிகள் அ.தி.மு.க. வசம் உள்ளன. கும்பகோணம் தி.மு.க., மயிலாடுதுறை பா.ஜ.க. இந்த ஆறிலும் தி.மு.க.,





• ஓ.எஸ்.மணியன் • மணி சங்கர் அய்யர்

# மயிலாடுதுறை!



அ.தி.மு.க. ஆகிய இரு கட்சிகளுக்கும், சம அளவிலான வாக்கு பலம் இருக்கின்றது. இவை இரண்டுக்கும் அடுத்த நிலையில், ஆறு சட்டமன்றத் தொகுதிகளிலும் பா.ம.க.வுக்கென வலுவான வாக்கு வங்கி இருக்கின்றது. காங்கிரசுக்குப் பரவலாகவும், கணிசமாகவும், ஆதரவு ஓரளவு செல்வாக்கு இன்னும் குறையாமலும் உள்ளது. ஆனால், வழக்கம்போல் இங்கும் காங்கிரசில் ஒற்றுமை இல்லை, ஒத்துழைப்பும் இல்லை. ம.தி.மு.க. மற்றும் இரு கம்யூனிஸ்ட்டுகளுக்கும் குறிப்பிடும்படியான வாக்குகள் இருக்கின்றன. ஆனால் பா.ஜ.க.வுக்கென தனியான சதவிதக் கணக்கில், வாக்கு பலம் இங்கு இருப்பதாகத் தெரியவில்லை. (மயிலாடுதுறை சட்டமன்றத்தில் பா.ஜ.க. ஜெயித்தது தி.மு.க. உபயம்). விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பானது, தொகுதியில் பெரும்பான்மை தலித்துகள் வாக்குகளை நம்பி களத்தில் குதித்துள்ளது.

**தொ**குதிக்குள் தலித் முதியவர்கள், நடு வயதுக்காரர்கள், இளைஞர்கள் சிலரிடம் பேசினோம். அவர்களிடையே அதி.மு.க., தி.மு.க., காங்கிரஸ் ஆகிய கட்சி

களுக்கு, இறங்கு வரிசையில் ஆதரவு. கிராமங்களில் சாதிய வேறுபாடுகளால் விளையும் மோதல்களை, தலித் இளைஞர்கள் பலரும் விரும்பவில்லை. வில்லிய நல்லூரில், தலித் மற்றும் இதர சாதியினரிடையே வேறுபாடு எப்போதும் ஏற்பட்டதில்லை என்கின்றனர். ஆனால், விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பானது, தலித் இளைஞர்களை ஈர்ப்பதற்கு முயற்சிக்கிறது. ஒரு வேளை கணிசமான அளவு வாக்குகளை விடுதலைச் சிறுத்தைகள் வேட்பாளர் பெற நேர்ந்தால், அதுவும் அ.தி.மு.க.வின் வாக்கு வங்கியிலிருந்துதான் மாறி வந்ததாக அமையுமெனச் சொல்லப்படுகிறது.




வாக்காளர்கள் மத்தியில், அ.தி.மு.க.வின் கடந்த மூன்றாண்டுக் கால ஆட்சி, அணுகுமுறை மற்றும் செயல்பாடுகள் குறித்த கசப்புணர்வு அதிகமாக உள்ளது. ஆனால் ஓ.எஸ். மணியன் நம்பிக்கையோடு பேசுகிறார் : "விவசாயிகளுக்கு வறட்சி நிவாரண உதவிகள் பலவும் தமிழக அரசு தொடர்ந்து செய்து வருகிறது. எண்பது கோடி ரூபாய் நிலவரியை ரத்து செய்துள்ளது. பயிர் நிவாரணமாக முன்னூற்றைம்பது கோடி ரூபாயும், வறட்சி நிவாரண உதவியாக முன்னூற்றுப் பதினொரு கோடி ரூபாயும், விவசாயிகள் அனைவரும் பலனடையுமாறு நேரிடையாகப் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. காவிரி நதி நீரைப் பெறுவதில் அம்மா காட்டி வரும் உறுதி, வறட்சி நிவாரணப் பணிகளில் விவசாயிகளுக்கு உதவும் நல்லெண்ணம் மிகுந்த அம்மாவின் நடவடிக்கைகள், ஆகியன இத்தொகுதியில் எனக்கு வெற்றியைத் தேடித் தந்து விடும்!"

"எல்லா கிராம மக்களும் என்னை நன்கு அறிந்தவர்கள். நானும் அவர்களை நன்கு அறிந்தவன். எனது வெற்றி, உறுதி செய்யப்பட்ட ஒன்று!" என்று மிகுந்த நம்பிக்கையுடன் பேசுகிறார் மணி சங்கர் அய்யர்.

ஆளுங் கட்சியின் செல்வாக்கை முறியடித்து, முன்னேற வேண்டிய கட்டத்தில் இருக்கிறார் காங்கிரஸ் வேட்பாளர். தொகுதி மக்களின் அபிமானம், கூட்டணிக் கட்சிகளின் பெரும்பான்மை வாக்கு பலம் ஆகியன ஒன்றிணைந்து, பந்தயத்தில் முந்துகிறார் மணி சங்கர் அய்யர். தேர்தல் நெருங்கும் நேரத்தில் மக்களின் மனோநிலையை தங்களுக்கு ஆதரவாக மாற்ற எதிரணியினர் என்ன செய்வார்கள் என்று சொல்வதற்கில்லை!

கட்டுரை, படங்கள் :
**ஸ்ரீரங்கம்**
**திருநாவுக்கரசு**

# கோடி கோடி

## ■ ராஜேஷ்குமார் ■

"**வை**கை நாம பெத்த பொண்ணாயிருந்தா, இப்படியொரு காரியத்தைப் பண்ணியிருப்பீங்களா?" உமையாள் கேட்ட கேள்விக்கு சீனிவாசன் சிரித்தார்.

"உமை! நாம பெத்த பொண்ணா வைகை இல்லாததனாலத்தான் இந்த அண்டர்க்ரௌண்ட் வேலை. அவ எம் பொண்ணாயிருந்தா, நேரிடையாகவே, 'கல்யாணம் வேண்டாம். டி.வி சீரியல்ல நடி'ன்னு உத்தரவு போட்ட மாதிரி சொல்லியிருப்பேன்...! இது எப்பேர்ப்பட்ட வாய்ப்பு... ஒரு நாளைக்கு சம்பளம் ஐம்பதாயிரம் ரூபாய்ன்னா... ஒரு மாசத்துக்கு எவ்வளவு வரும்னு கொஞ்சம் யோசிச்சுப் பாரு.... மயக்கமே வந்துடும்... சீரியல் மட்டும் பிக்கப் ஆயிடுச்சுன்னு வைய்யி, ஒரு வருஷத்திலே வைகை கோடீஸ்வரி."

"கல்யாணம் நின்னு போயிட்டா மட்டும் வைகை டி.வி சீரியலில் நடிக்க ஒத்துக்குவாளா என்ன...?"

"அதுக்கப்புறம் அவ மனசைக் கரைக்கிறது ஈஸி. ரேணுகாதேவியும் நாலைஞ்சு தடவை வந்து பேசினா, வைகை கண்டிப்பா ஒத்துக்குவா..."

"நீங்க என்னதான் சொன்னாலும் இதெல்லாம் சரின்னு என்னோட மனசுக்குப் படலைங்க.... நமக்கு கல்யாணமாகி அஞ்சு வருஷம் குழந்தை இல்லாததனால, கருணாம்பிகா அநாதை விடுதிக்குப் போய் அங்கே ஆறுமாசக் குழந்தையாய் இருந்த வைகையைத் தத்து எடுத்து வளர்த்தோம். வைகை வீட்டுக்கு வந்த வேளை... அடுத்தடுத்த ரெண்டு வருஷத்துக்குள்ளேயே யமுனாவும், துங்கபத்ராவும் பொறந்தாங்க... இருந்தாலும் வைகைதான் இந்த வீட்டுக்கு மூத்த பெண். நியாயப்படி பார்த்தா, அவளுக்குத்தான் மொதல்ல கல்யாணம் நடந்து இருக்கணும். அதாவது நாம நடத்தி வெச்சிருக்கணும்..."

"அவதான் கல்யாணமே வேண்டாம்னு சொல்லிட்டாளே?"

"அவ.... சொன்னா, விட்டுடறதா...?"

"உமை! நீ இப்போ என்ன சொல்ல வர்றே?"

"என் வயித்துல பொறந்த ரெண்டு பொண்ணுகளுக்கும் பத்து லட்ச ரூபாயை செலவு பண்ணி, நல்ல வரன்களாய்ப் பார்த்து கல்யாணத்தைப் பண்ணி வெச்சா வைகை. இன்னிக்கு வைகைக்கு ஒரு நல்ல வரன் வந்து வாய்ச்சு, கல்யாணம் முடியற நிலைமையில் இருக்கும் போது, அதைக் கெடுக்க நினைக்கிறது மிகப் பெரிய பாவம்..."

"இந்த ப்ரானேஷ் இல்லேன்னா, வைகைக்கு வேற மாப்பிள்ளையே கிடைக்காதா என்ன...? வைகை மட்டும் சீரியல்ல நடிக்க ஆரம்பிக்கட்டும். பெரிய பெரிய இடங்களிலிருந்தே வரன்கள் வரும்..."

"உங்களுக்கு ஒரு உண்மை தெரியலைங்க..."

"என்ன...?"

"இளஞ்செழியனின் திடீர் மரணத்தால பாதிக்கப்பட்டு, இனிமே கல்யாணமே வேண்டாம்ன்னு தீர்மானமாய் சொல்லிட்டிருந்த வைகை, ப்ரானேஷைக் கல்யாணம் பண்ணிக்க ஒத்துக்கிட்டது, சாதாரண விஷயமில்லை. ப்ரானேஷ் கிட்டயிருந்து ஏதோ ஒண்ணுதான் அவளை ஈர்த்திருக்கு. அந்த ஈர்ப்பு நாளைக்குப் பெரிய பெரிய இடங்களிலிருந்து வர்ற வரன்கள்கிட்டே இருக்குமா...?"

"இதோ பார் உமை...! வாழ்க்கையில் நமக்கு வாய்ப்புகள் வரும்போது அதை கெட்டியாப் பிடிச்சுக்கணும்."

**வா**சற்படியில் நின்று எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த வைகை,

# மின்னல்கள் 15



அதற்கு மேலும் காத்திருக்கப் பிடிக்காமல், கதவை மெல்லத் தட்டினாள்.

சீனிவாசன் போலி வியப்போடு கேட்டார்.

"என்னம்மா வைகை...! இன்னிக்கு அரை மணி நேரத்துக்கு முன்னாடியே ஸ்கூலிலிருந்து வந்துட்டே...?"

"ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்தி உங்ககிட்டே பேசணும்... அதுக்காக தாம்பா..."

"சொல்லும்மா... என்ன விஷயம்...?"

"அப்பா...! ப்ரானேஷோட அம்மாவுக்கு என்னை மருமகளாக்கிறதுல இஷ்டமில்லையாம். இந்தக் கல்யாணத்தை நிறுத்தணுமாம்."

"அட... ஏம்மா...?"

"அந்தம்மாவுக்கு என்னைப் பத்தி ஒரு விஷயம் தெரிஞ்சுடுச்சு..."

"எந்த விஷயம்...? நீ எங்களுக்குப் பிறந்த பெண்ணில்லை என்கிற விஷயமா...?"

"நல்ல வேளை...! நம்ம மூணு பேருக்கு மட்டுமே தெரிஞ்ச அந்த விஷயம், ப்ரானேஷோட அம்மா காதுக்குப் போகலை. போயிருந்தா, அந்த அம்மா இன்னமும் அப்செட் ஆயிருப்பாங்க... இது என்

னோட கிட்னி விஷயம். மூணு வருஷத்துக்கு முந்தி ஒரு ஏழை கல்லூரி மாணவிக்கு நான் கிட்னி தானம் பண்ணின விஷயத்தை, யாரோ அந்த அம்மா காதுல போட்டுட்டாங்க போலிருக்கு... ஒரு கிட்னியோடு இருக்கிற என்னை மருமகளாக்கிக்க அந்த அம்மாவுக்கும் அவரோட கணவருக்கும் இஷ்டமில்லையாம்"

"பார்றா அநியாயத்தை..!" சீனிவாசன் நன்றாகவே நடித்தார். உமையாளின் முகம் பாறையாய் இறுகிப் போயிருந்தது.

வைகை தொடர்ந்தாள், "ப்ராணேஷ் கிட்டே நான் கிட்னி தான விஷயத்தைச் சொல்லாம கல்யாணத்துல இஷ்டமில்லைன்னு பொதுவா சொல்லி கல்யாணத்தை நிறுத்தணுமாம்... அதுவும் அந்த அம்மா முன்னாடியே சொல்லணுமாம்..."

சீனிவாசன் போலியாய் ஆவேசப் பட்டார்.

"சொல்லிரும்மா...! உங்க வீட்டுக்கு மருமகளாய் வர எனக்கும் துளிக்கூட இஷ்டமில்லைன்னு மூஞ்சியில அடிச்ச மாதிரி சொல்லிடும்மா!"

உமையாள் அழுகையை மென்று விழுங்கிக் கொண்டிருக்க, வைகை அதை கவனிக்காதவள் போல், சீனிவாசனிடம் திரும்பினாள்.

"அப்பா...! நான் என்ன காரணம் சொல்றது...? கிட்னிதான விஷயத்தைப் பத்திப் பேசக்கூடாதுன்னு, அந்தம்மா சொல்லியிருக்காங்க..."

"வேற ஒரு காரணம்தான் கைவசம் இருக்கே! அதைச் சொல்லம்மா..!"

"எதுப்பா...?"

"ரேணுகாதேவியோட டீ.வி. சீரியலில் நடிக்கப் போறேன்னு சொல்லும்மா. ஆள் அந்த நிமிஷமே இடத்தை காலி பண்ணிடுவான்."

"அப்பான்னா... அப்பாதான்...!" சொன்ன வைகை, உமையாளிடம் திரும்பினாள்.

"அம்மா...! எனக்குப் பசிக்குது... சாப்பாடு போடறியா...?"

உமையாள் கண்ணீரை அடக்கிக் கொண்டே சமையலறையை நோக்கிப் போக, வைகை பின் தொடர்ந்தாள்.

**ம**றுநாள் காலை பத்து மணி.

ப்ராணேஷ், மணிமேகலை நாற்காலிகளில் சாய்ந்திருக்க, எதிரே சீனிவாசனும் வைகையும் நீள பெஞ்சில் உட்கார்ந்திருந்தார்கள்.

"வைகை! என்ன காரணத்துக்காக என்னையும், என்னோட அம்மாவையும் இங்கே வரச்சொன்னே...? நடக்கப் போகிற நம்ம கல்யாணத்தில் ஏதாவது பிரச்னையா...?"

வைகை புன்னகை செய்ய ப்ராணேஷ் கேட்டான்.

"எதுக்காகச் சிரிக்கிறே வைகை...?"

"நடக்கப் போகிற நம்ம கல்யாணம்னு சொன்னீங்களே... அதைக் கேட்டதும் சிரிப்பு வந்துடுச்சு..."

"ஏன்...?"

"அது நடக்காத கல்யாணம்."

"என்னது! நடக்காத கல்யாணமா...?"




ப்ராணேஷின் முகம் சட்டென்று இருட்டுக்குள் விழுந்தது.

"வைகை! நீ என்ன சொல்றே? அன்னிக்கு ஒத்துகிட்டே...?"

"அது தப்புதான்..."

"வைகை! உன்னை யாரோ மிரட்டியிருக்காங்கன்னு நினைக்கிறேன்"

"என்னை யாரும் மிரட்ட முடியாது!"

ப்ராணேஷ் விருட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து நின்றபடி கோபாவேசமாய்க் கத்தினான்.

"நோ... வைகை...! இந்தக் கல்யாணத்துல இஷ்டமில்லைன்னு உன்னோட உதடுகள் சொன்னாலும், கண்கள் நிஜத்தைச் சொல்ல படாதபாடு பட்டுகிட்டு இருக்கு... இப்படியொரு அதிரடி முடிவுக்கு வர நிச்சயம் நீ காரணம் கிடையாது. உனக்குப் பின்னாடி வேற யாரோ இருக்காங்க..."

சீனிவாசன் கடுமையான குரலில் குறுக்கிட்டார்.

"இதோ பாருங்க... தம்பி...! வைகைக்கு கல்யாணத்துல இஷ்டமில்லைன்னா அதோடு விட்டுருங்க... அவளுக்கு வேற ஃப்யூச்சர் ப்ளானிங்கெல்லாம் இருக்கும் போலிருக்கு..."

"ஃப்யூச்சர் ப்ளானிங்கா...?"

"ஆமா...! ஒரு பிரபலமான டீ.வி. சீரியல் கம்பெனி, வைகையை நடிக்கக் கூப்பிட்டிருக்காங்க... அதுக்காக ஒரு பெரிய தொகையும் பேசப்பட்டிருக்கு... வைகையும் அதுல நடிக்க சம்மதம் கொடுத்தாச்சு..."

"பொய்...!" சமையலறைக் கதவில் சாய்ந்து உட்கார்ந்திருந்த உமையாள், அடி வயிறு எக்கிக் கத்தினாள். எல்லோருடைய பார்வைகளும் அவள் மேல் அதிர்ச்சியுடன் திரும்பின.

உமையாள் எழுந்து வேக நடை போட்டு ப்ராணேஷை நெருங்கினாள். "தம்பி! இவங்க எல்லாருமே பொய் பேசிட்டிருக்காங்க... யார் சொல்ற




தும் உண்மை கிடையாது. வைகைக்கு உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிறதுல இஷ்டம்தான்...! அவளோட விருப்பத்துக்குக் குறுக்கே நிக்கிறது யார் தெரியுமா...? உங்க அம்மாதான்..."

ப்ராணேஷின் பார்வை மணி மேகலையின் மேல் திரும்பியது. அதிர்ச்சியோடு நிலைத்தது.

"அ...அ... அம்மா...நீ... நீயா...?"

மணிமேகலை இறுகிய முகத்தோடு குரலை உயர்த்தினாள்.

"ஆமாண்டா... நான்தான்...! டேய்... ப்ராணேஷ்! இவங்க எல்லாருமா சேர்ந்து ஒரு விஷயத்தை மறைச்சுட்டாங்க. இந்த வைகை இருக்காளே... இவளுக்கு ஒரு கிட்னி கிடையாது. மூணு வருஷத்துக்கு முந்தி யாரோ ஒரு பொண்ணுக்கு கிட்னியை டொனேட் பண்ணியிருக்கா"

"இந்த விஷயம் எனக்குத் தெரியுமேம்மா..."

"என்னது... உனக்குத் தெரியுமா...?"

"நல்லாவே தெரியும்... வைகையே என்கிட்டே சொன்னதுதானே இது...?"

"ஒரு கிட்னி அவளுக்கு இல்லைன்னு தெரிஞ்சுமா, நீ கல்யாணத்துக்கு ஒத்துகிட்டே...?"

"அம்மா...! நான் வைகையைக் கல்யாணம் பண்ணிக்க முக்கியக் காரணமே அந்த ஒரு கிட்னிதான்."

"டேய்...! நீ என்னடா சொல்றே...?"

"எனக்கும் ஒரு கிட்னிதானே இருக்கு...?" சொன்ன ப்ராணேஷ், தன்னுடைய சட்டையையும் பனியனையும் சற்றே உயர்த்தி இடுப்பின் பின்பகுதியைக் காட்டினான். ஆபரேஷன் செய்ததற்கு அடையாளமாய் இரண்டு அங்குல நீளத்துக்கு ஒரு தழும்பு தெரிந்தது.

மணிமேகலை நிலைத்துப்போன விழிகளோடு நிற்க, ப்ராணேஷ் புன்னகையோடு தொடர்ந்தான்.

"அம்மா...! போன வருஷம்தான் என் ஃப்ரண்ட் ஒருத்தனைப் பார்க்கிறதுக்காக புனே போனது உனக்குத் தெரியும். நான் அங்கே போனபோது, அவன் ஹாஸ்பிடல்ல அட்மிட்டாகியிருந்தான். ரெண்டு கிட்னியும் ஃபெய்லியர். கையில் ஆறு மாதக் குழந்தையோடு அவனோட மனைவி, என்கிட்டே புருஷன் உயிரை, காப்பாத்திக் கொடுக்கச் சொல்லி கதறி அழுதா. நான் டாக்டர்களை கன்ஸல்ட் பண்ணினேன். மாற்று சிறுநீரகம் பொருத்தறது ஒண்ணுதான் வழின்னு தீர்மானமா சொல்லிட்டாங்க. என்னோட கிட்னி பொருந்துமான்னு கேட்டேன். டெஸ்ட் பண்ணிப் பார்த்துட்டு பொருந்தும்ன்னு சொன்னாங்க... ஒரு கிட்னி கொடுத்துட்டேன்... இன்னிக்கு அந்த ஃப்ரண்ட் ஆரோக்கியமா இருக்கான்..."

ப்ராணேஷ் பேச்சை நிறுத்த, வைகை தொடர்ந்தாள்.

"உங்க மகன் ப்ராணேஷ் போன மாசம் என்னைப் பார்க்க வந்திருந்தபோது, உங்க கல்யாணம் எப்போன்னு கேஷுவலா

# பிரிய மனமில்லை!



✉ 'நமக்கே உரிமையாம்' தொடர் மூலம் சிந்திக்க வைத்துவிட்டார். இந்தியா ஒளிர வேண்டும் என்றால், நாம் எல்லாருமே சிந்தித்து வாக்களிக்க வேண்டும். இருபத்தாறு வாரங்களாக சிதம்பரத்தோடு நேரில் பேசியது போலவே இருந்தது. அரசியல்வாதிகளில் சிறந்தவர் ப. சிதம்பரம்.

சிவராமகப்பிரமணியன், தூத்துக்குடி

✉ பொருளாதார நுணுக்கங்களை, புரியாத அரசியலமைப்புச் செய்திகளை, கோர்வையாக வழங்கிய ப. சிதம்பரத்துக்குப் பாராட்டு. அவரது எழுத்தைப் பிரிய மனம் வரவில்லை. ஹாட்ஸ் ஆஃப்!

ரேவதிப்ரியன், ஈரோடு

✉ தேர்தலுக்குப் பின்னர் ப.சிதம்பரத்தின் பாராளுமன்ற அனுபவங்களை தொடராக வெளியிட்டால், பயனுள்ளதாக இருக்கும்.

நந்தினி மாசிலாமணி, மதுரை

✉ வாரா வாரம் அரசியல் யதார்த்தக் கருத்துகளை வாரி வழங்கி வந்தார். இத் தொடருக்கு 'முற்றும்' போட்டு, வாசகர்களை வாரி விட்டது நியாயமா...?

நாமக்கல் பாலு, நாமக்கல்

✉ 'நமக்கே உரிமையாம்' புத்தகமாக வெளி வந்து அறிவுக்களஞ்சியமாக அனைவரது இல்லங்களையும் அலங்கரிக்கட்டும். சான்றோர் ஆக்குதல் தந்தைக்குக் கடன். 26 வாரங்கள் எழுத வைத்த 'கல்கி'யின் கடனை எப்படி அடைப்பது?

ஆர்.ஜி. பாலன், திசையன்விளை

கேட்டேன். அதுக்கு உங்க மகன் என்ன சொன்னார் தெரியுமா...? நான் ஒரு உண்மையைச் சொன்னால், எந்தப் பெண்ணும் என்னை கல்யாணம் பண்ணிக்க முன் வரமாட்டாள். அதுக்காக ஒரு பொய்யைச் சொல்லி, எந்தப் பெண்ணையும் கல்யாணம் பண்ணிக்க நானும் விரும்பலை. மொத்தத்துல, இந்த ஜென்மத்துல எனக்கு கல்யாண ப்ராப்தி கிடையாது. - அவர் இப்படிச் சொன்னதும் எனக்குள் குழப்பம். கொஞ்சம் புரியும்படியா சொல்லுங்கன்னு நான் கேட்டதும், அவர் தன்னோட ஆபரேஷன் தழும்பைக் காட்டி விபரம் சொன்னார். எனக்கு அது அதிர்ச்சியாய் இருந்தாலும், எந்தப் பெண்ணையும் நான் ஏமாத்தப் போறதில்லைன்னு அவர் சொன்னது எனக்குப் பிடிச்சிருந்தது. நானும் ஒரு கிட்னி டோனர்தான்னு அவர்கிட்டே சொன்னேன். அதுக்கு அவர் "அப்படியா...! வீ ஆர் இன் த சேம் போட்"ன்னு சொல்லிட்டு, விளையாட்டா என்கிட்டே "நீங்களாவது என்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டீங்களா"ன்னு கேட்டார். அவர் குரலில் இருந்த ஏக்கம், என்னோட மனசைத் தொட்டது. ஒரு பத்து விநாடிதான் யோசிச்சேன். பிறகு சீரியஸாவே "எஸ்"ன்னு சொல்லிட்டேன். அவர் பட்ட சந்தோஷத்துக்கு அளவேயில்லை. ப்ரானேஷ் என்ற ஒரு நல்ல மனிதரோடு என்னோட வாழ்க்கையை பார்ட்னர்ஷிப் போட்டுக்க ஆசைப்பட்டேன். அது தப்புன்னு நீங்க சொன்னா, அந்த ஆசைக்கும் 'டாட்டா... பை... பை' காட்டிட்டுப் போக நான் தயார்..."

"வேண்டாண்டியம்மா...! என்னையும் என்னோட பையனையும் விட்டுப் போயிடாதேம்மா என் ராஜாத்தி...!" பெரிய குரலில் கத்திக் கொண்டே, ஓடிப் போய் வைகையை அணைத்துக் கொண்டாள் மணிமேகலை.

எல்லோருடைய கண்களிலும் நீர். சீனிவாசனின் கண்களில் மட்டும் கொஞ்சம் அதிகப்படியாய்.

ஜன்னலுக்கு வெளியே அடித்துக் கொண்டிருந்த 102 டிகிரி மத்தியான வெயிலில், இப்போது நிலவின் குளிர்ச்சி.

(முற்றும்)



# சித்திரம் பேசுதடி...

சிந்தனைச் சித்திரங்களை வரைவது எப்படி...?

1. ஏதாவது ஒரு பாடத்தை எடுத்துக் கொண்டு, அதன் மையக் கருத்தைக் கண்டுபிடியுங்கள். பெரும்பாலும் இது 'தலைப்புச் செய்தியாக' இருக்கும். ஆகவே அதிகமாகச் சிரமப்பட வேண்டியதில்லை.

2. இனி, ஒவ்வொரு பத்தியையும் ஆழமாகப் படியுங்கள். இப்படிப் படிக்கும்போதே பத்தியின் மையக் கருத்தைக் கண்டுபிடித்து, ஒரு வண்ண ஸ்கெட்ச் பேனாவினால் அடிக்கோடிடுங்கள். இதற்குத் துணையாக உள்ள துணைக் கருத்துகளையும் கண்டுபிடித்து அடிக்கோடிடுங்கள். இனி, இக் கருத்துகளைச் சொல்லும் முக்கிய சொல், அல்லது சொற்களைக் கண்டுபிடித்து அவற்றை 'box' செய்யுங்கள். (குறிப்பு: அடிக்கோடிடுவதற்கும், box செய்வதற்கும் வெவ்வேறு வண்ணங்களைப் பயன்படுத்துங்கள் - இவை ஒன்றுக்கொன்று வேறுபட்ட, வித்தியாசமான (contrasting) வண்ணத்தில் இருந்தால் மிக நல்லது. (உ-ம், சிவப்பு, பச்சை, நீலம்) சிவப்பையும், ரோஸ்/ஆரஞ்சு கலர்களையும் ஒன்றாகப் பயன்படுத்தாதீர்கள். குழப்பம் ஏற்பட வாய்ப்பு உண்டு.

3. இப்படியே ஒவ்வொரு பத்தியையும் ஆராயுங்கள். சில சமயம் ஒரு பத்தியில் சொல்லப்பட்டுள்ள தகவல்களுக்குத் தொடர்புடைய வேறு தகவல், இரண்டு அல்லது மூன்று பத்திகள் தாண்டி இன்னொரு பத்தியில் இருக்கும். இவ்விரு பத்திகளையும் தொடர்புபடுத்த + ≠ # Δ • ■●◆❑☆ போன்ற குறிகளைப் பயன்படுத்துங்கள்.

இப்போது பாடத்தைப் பற்றி



## மார்க் வாங்கலாம் வாங்க 16

பேராசிரியர் ப.இராம்கோபால்




- சம்பத் குமாரி

உங்களுக்கு ஒரு முழுமையான வடிவம் கிடைத்திருக்கும். இனி, சிந்தனைச் சித்திரம் வரையப் போகலாம். இதற்கு உங்களுக்குத் தேவை 1) ஆறு வண்ண ஸ்கெட்ச் பேனாக்கள். இவற்றில் மூன்று டார்க் கலராகவும், மூன்று லைட் கலராகவும் இருக்க வேண்டும். 2) சற்றே கெட்டியான தாள்கள் (Xerox papers)

சிந்தனைச் சித்திரம் வரையும் முறையை படிப்படியாக கீழே கொடுத்திருக்கிறேன்.

1. பாடத்தின் மையக் கருத்தை ஒரு படமாக தாளின் மையத்தில் வரையுங்கள். இது முடியாத போது, மையக் கருத்தைச் சொல்லும் எழுத்துகளை முப்பரிமாண வடிவங்களாக வரையுங்கள். இது மிகவும் சுலபம்!



3D

இயற்கையில் இருபரிமாண சமாசாரமே இல்லை; எல்லாமே முப்பரிமாணம்தான். எனவே விஷயங்களை முப்பரிமாண முறையில் மூளைக்குச் செலுத்தும்போது, அவை வேகமாகவும் ஆழமாகவும் பதிவாகின்றன. எல்லாம் ஒரு த்ரீ டி மேஜிக்தான்.

2. இந்த மையக் கருத்திலிருந்து, கோடுகளை வரையுங்கள். இவை சற்று திக்காக இருத்தல் அவசியம். ( ▬▬▬ கோடு இப்படி இருக்க வேண்டும். - இவை மையக் கருத்திலிருந்து - கருத்துப் படத்திலிருந்து தாளின் விளிம்பு இருக்கும் திசையில் செல்ல வேண்டும்.) இவற்றின் மேல் சற்றே பெரிய எழுத்துகளில் (Capital letters-ல்) பிற பத்திகளில் உள்ள மையக் கருத்துகளைச் சொல்லும் முக்கியச் சொற்களை எழுதுங்கள். (உதாரண படத்தைப் பாருங்கள்.) எத்தனை பத்திகளில் மையக் கருத்து உள்ளதோ, அத்தனை கோடுகள் வரைவது அவசியம்.

3. மேலே வரைந்த திக்கான கோட்டிலிருந்து எத்தனை பத்தி துணைக் கருத்துகள் உள்ளனவோ, அத்தனை எண்ணிக்கையில், சற்றே சன்னமான கோடுகளை வரையுங்கள். இவற்றின் மேல் இந்தக் கருத்துகளைக் குறிக்கும் key-wordsகளை எழுதுங்கள். திக்கான கோடுகள் வரைய ஒரு நிறமும், சன்னமான கோடுகள் வரைய இன்னொரு நிறமும், எழுத்துகளை எழுதுவதற்கு வேறொரு நிறமும் பயன்படுத்துங்கள். வண்ணமயமாக இருந்தால்தான் மனத்தில் பதியும். எழுத்துகளை ஸ்கேல் வைத்துக் கொண்டு கச்சிதமாக வரையாதீர்கள். சும்மா, கண்டபடி வரையுங்கள். (உ-ம் சொல்லப்பட்ட T நீங்கள் எளிதில்

## திருத்தம்



கடந்த (25.4.2004) இதழில் வெளியான 'கேள்வி இங்கே; பதில்கள் எங்கே?' என்ற கட்டுரையில் அகி.வேங்கடசுப்ரமணியம் புகைப்படத்துக்குப் பதிலாக கே.வேங்கடசுப்ரமணியம் படம், தவறுதலாகப் பிரசுரமாகிவிட்டது.

தவறுக்கு வருந்துகிறோம்.

- ஆர்.

புரிந்து கொள்வதற்காக கச்சிதமாக வரையப்பட்டுள்ளது.

4. எங்கெல்லாம் **முடியுமோ** (கவனிக்கவும் நான் 'தேவை'யோ என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை) அங்கெல்லாம் படங்கள் வரையுங்கள்.

5. ஒத்த தகவல்களை இணைக்க 'சர் சர்' ⌣ ⌣ ↗ ↙ என்று அம்புக் குறிகளைப் போடுங்கள்.

6. முதலில் பென்ஸிலால் சிந்தனைச் சித்திரத்தை வரைந்துவிட்டு, நன்கு சிந்தித்து அதை மேம்படுத்திய பிறகு, வண்ணங்களைப் பயன்படுத்தி வரைவது சிறந்த வழி.

நீங்கள் இப்போது 'யாரோ' ஒருவர் எழுதிய பாடத்தை 'அக்கு வேறு ஆணி வேறாகப்' பிரித்து, மீண்டும் இணைத்து **உங்கள் படமாக** மாற்றியிருக்கிறீர்கள். இந்த மாற்றம் நிகழ்கிறபோது, பாடத்தில் உங்களுக்குப் புரியாத விஷயங்களே இருக்க முடியாது. ஏனெனில், புரியாத விஷயம் இருக்கும் வரை உங்களால் படம் வரையவே முடியாது! பல்லில் சிக்கிய பாக்குத் துண்டை குண்டூசி கொண்டு குத்திக் குத்தி எடுக்கும் வரை நாக்கு ஓயாது போல, புரியாத விஷயத்தைப் புரிந்து கொள்ளும் வரை, மனம் அதைக் குடைந்து கொண்டே இருக்கும். ஆக, கற்றல் 'கசடற' நடக்கும். ஒவ்வொரு சிந்தனைச் சித்திரத்தையும் உருவாக்கிய பின்பு, மனத்தில் கிடைக்கும் ஆனந்தத்தை அனுபவித்துப் பார்த்தால்தான் தெரியும்.

இந்தக் கட்டுரைத் தொடரின் ஒவ்வொரு அத்தியாயத்தைப் படித்து முடித்ததும், அவற்றில் நான் சொல்லி வந்த டெக்னிக்குகளைக் கண்டிப்பாகச் செய்து பார்த்திருப்பீர்கள். உங்களால் சும்மா இருந்திருக்க முடியாது! இப்போது கடைசியாக, நீங்கள் பயிற்சி செய்து பார்க்க வேண்டியது; சிந்தனைச் சித்திரங்கள் டெக்னிக். ஒரு வேலையில் முழுமையாக மூளையை ஈடுபடுத்தவும், அதில் கவனத்தைக் குவிக்கவும், இது தான் மிகச் சிறந்த டெக்னிக். இந்தக் கட்டுரைத் தொடரின் சிகரமும் இது தான். இதைச் செய்து பாருங்கள். நான் மேலே சொன்னவை அனைத்தும் உண்மை என்று உணர்வீர்கள்.

(தொடரும்)



போட்டா, ராமர் கட்சி. நாலு விரலை நாசூக்கா காட்டினா, மதிமுக. அஞ்சு விரலை அசைச்சுக் காட்டினா சூரியன். ஆனா யாரையும் நான் ஆதரிக்கல. அந்த எண்ணம் எனக்குள்ள அவதரிக்கல! ஆனா 'அலை' படத்துல என் 'கலை'யை ரசிக்காம, பாதியில எழுந்திருச்சுப் போன செவத்தகண் சிங்காரம் - செங்கல்பட்டுல சுயேட்சையா நிக்கிறாரு- அவரை என் ரசிகர்கள் ஜனநாயக முறைப்படி தோற்கடிப்பாங்க - இது என் கருத்து. ஓவரா பேசுனா குத்து!

**விஜய்** : நான் தான் திருமலை - எதிர்த்தா எரிமலை. என்னடா அது?

# ஓவர

**சூ**ப்பர் ஸ்டார் ரொம்பத் தெளிவா குழம்பி, தேர்தல் 'வாய்ஸ்' கொடுத்தாச்சு... இன்னமும் கொடுக்கப் போகிறார். நாங்களும் 'வாய்ஸ்' கொடுப்போம்னு - நம்ம தமிழ் 'பஞ்ச்' டயலாக் நடிகர்கள் களமிறங்கினால்...

**சிம்பு** : என் பேரு சிம்பு
சிம்புன்னா அன்பு
- என்கிட்ட இழுத்திட்டான் வம்பு - அதனால
விடப்போறேன் தேர்தல் அம்பு!

**நிருபர்** : அப்ப கிருஷ்ணசாமியை ஆதரிக்கப் போறீங்களா?

**சிம்பு** : நான் கட்டைவிரலைக் காட்டினா காங்கிரஸ். இரட்டை விரலை ஆட்டினா அம்மா. மூணு விரல்ல நாமம்



அதுன்னா எதுடா...? தேர்தல் ஒரு வட்டம்டா - இங்க தோக்கிறவன் ஜெயிப்பான் - ஜெயிக்கிறவன் தோப்பான்! போஸ்டர் ஒட்டுறது - பிரசாரம் பண்றது - மாதிரி பயாஸ்கோப் வேலையெல்லாம் உன் தொகுதியில வைச்சுக்கோ - என் தொகுதியில வைச்சுக்கிட்டா டெபாசிட் ஒழிஞ்சிடும்!

**நிருபர்** : இப்ப யார்கிட்ட பேசிக்கிட்டு இருக்கீங்க... என்ன தான் சொல்ல வர்றீங்க?

**விஜய்** : இல்லீங்கண்ணா - எல்லா தொகுதியிலும் சொல்லி அடிக்கும் கில்லிங்கண்ணா நம்ம படங்கண்ணா! ரிலீ

ஆயிடுச்சு - தேர்தல் பிஸில யாரும் மறந்திடக்கூடா துன்னு - நானும் பிரைவேட்டா வாய்ஸ் கொடுக்கிறங்கண்ணா!



**அஜித்** : நீ பொறுக்கி - எப்பவும் படிச்சவனாக முடியாது - நான் படிச்ச வன், எப்ப வேணாலும் பொறுக்கியாகலாம் - அதே மாதிரி நீ நடிகன் - ரேஸ் காரனாக முடியாது. நான் ரேஸ் காரன் - நடிகனா எப்பவும் இருப்பேன்... அது! நான் தனி யாளு இல்ல...

**நிருபர் : ஆமா தெரியும்.. ஷாலினி கூட இருக்கீங்க!**

**அஜித்** (டென்ஷனாகி) : இங்க பாருங்க நான் பாட்டுக்கு என் வழியில போய்க் கிட்டு இருக்கேன். இந்தப் பந்தயத்துல எனக்கு முதலிடம் வேணும். அதனால 'கார்' சின்னத்துல ஒரு கழுதை நின்னாக்

# பேசுனா குத்து!



கூட, என் ரசி கர்கள் வோட் டுப் போட்டு ஜெயிக்க வைப் பாங்க. எதிர்த்து நிக்கிறவனை பஞ்சராக்கு வாங்க... அது!

**விஜயகாந்த்** : தமிழ் நாட்டு மக்கள் தொகை ஆறரைக் கோடி. வோட்டு உள்ளவங்க எண்ணிக்கை நாலரைக் கோடி. அதில வோட்டுப் போடுறவங்க எண்ணிக்கை இரண்டு கோடி.. தமிழ்நாட்டுல குத்து மதிப்பா நாற்பத்தி மூன்று கட்சி இருக்கு. அதுல காங்கிரஸ்ல மட்டும் அறு பத்தாறு கோஷ்டி இருக்கு. கோஷ் டிக்கு ஒரு தலைவர் - இரண்டு துணைத் தலைவர் - மூன்று தொண்டர்கள் இருக்காங்க.

**நிருபர் : அதனால காங்கிரசைக் கவுக்கப் போறீங்களா?**

**விஜயகாந்த்** : இல்ல.. வோட்டுப் போடுறது ஒவ்வொரு இந்திய னோட ஜனநாயகக் கடமை. தன் வோட்டை வெளியில் சொல்லிப் போடுறவன் மனுசன் - ஆனா அமைதியா - தன் கடமையைச் செய்யறவன் உண்மையான தமிழ்க் குடிமகன் - என் ரசிகர்கள் தமிழ்க் குடிமகன்கள். துளசி வாசம்கூட மாறலாம். இந்தத் தவசி ரசிகர்கள், வாக்கு மாற மாட்டாங்க!

கற்பனை : **முகில்**

# நடக்குமென்பார்

**மேஷம்:** உங்க ராசிக்கு 2ல் அமோகமா சுக்கிரனோட ஆட்சியும், 5ல் குருவும் இருக்கறதால, எடுத்த காரியமெல்லாம் வெற்றியோ வெற்றி தான். எக்ஸ்ட்ராவா ரெண்டு பர்ஸ் வாங்கிக்கோங்க. பண நடமாட்டம் தீபாவளி ரெங்கநாதன் தெருவா ஆகப் போகுது. உத்தியோகத்தில் இருந்த சிக்கலும் சிடுக்கும் ஹெர்பல் ஷாம்பூ போட்ட மாதிரி, நீட்டாயிடும். குடும்பத்தில் குதூகலம் விளையாடும். கல்யாணக் கனவிலே இருக்கறவங்களுக்கு, நிறைவேற நேரம் வந்தாச்சு. பெண்களுக்கு நகை, நட்டுன்னு சேரப் போகுது.

**ரிஷபம்:** தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு, மன அமைதி எல்லாம் இருக்கும்னாலும், பண வசதி குறைவாயும் செலவு கூடுதலாயும் இருக்கிற நேரம். கடுமையான பேச்சு யார்கிட்டேயும் வேண்டாம். லாட்ஜ், புத்தகம், பத்திரிகை, டிராவல்ஸ் தொழில் கள்ல முன்னேற்றம் ஏற்படும். கலை, நாடகம், சினிமான்னு இருக்கறவங்க ரெடியா இருங்க. சான்ஸ் உங்க வீட்டுப் பக்கமா வருது. குடும்பத்தில் மகிழ்ச்சி இருந்தாலும், உடன் பிறந்தவங்க கொஞ்சம் 'தடா புடா'ம்பாங்க. அட்ஜஸ்ட் பண்ணுங்க.

**மிதுனம்:** கல்வி, கேள்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு இருக்கறவங்க இன்னும் மேல்படிக்குப் போகப் போறாங்க. தேவைக்கேற்ற பண வசதிதான். உத்தியோகத்தில் சுமுகமான சூழ்நிலை உண்டாகும். அரசுப் பணியாளர்களுக்கு கொஞ்சம் முன்னேற்றம் ஏற்படும். குடும்பத்தில் மகிழ்ச்சி இருந்தாலும் சின்னச்சின்ன 'லடாய்'கள் வரும். பொறுமையா சமாளிங்க. சுபகாரியங்கள் கைகூடும். பெண்களுக்கு சின்னச் சின்ன சந்தோஷங்கள் காத்திருக்கு.

**கடகம்:** உங்க ராசிக்கு 11ல் சிம்மாசனத்தில் சுக்கிரனும், சனியும் செவ்வாயும் பரிவாரமா நிக்கிறதால நீங்க திட்டம் போட்டு வட்டம் போடுறது எல்லாம் சக்ஸஸ்தான். அரசாங்க அனுகூலமும் பக்க பலமாகும். துரும்பா இளைச்சு உங்களைத் துவள வைத்த உங்க பர்ஸ் மெதுவா வீங்க ஆரம்பிக்கும். ரியல் எஸ்டேட் பண்ணறவங்களுக்குப் புதையல் காத்திருக்கு. வீட்டில் திருமணக் காரியங்கள் அனுகூலமா நடக்க ஆரம்பிக்கும். பெண்களுக்கும் மாணவர்களுக்கும் முன்னேற்றமான காலம்.

**சிம்மம்:** குருவோட சானல் வழியா சூரியன் பார்க்கிறதால தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு, புண்ணிய காரியங்கள்னு இருப்பீங்க. மனசுல இருந்த குழப்பங்கள் குறைஞ்சு தெளிவும், தன்னம்பிக்கையும் டானிக்கா பலம் கொடுக்கும். அரசியல்வாதிங்க உயர்ந்துடுவாங்க. உத்தியோகத்தில உங்க எதிரணியில இருந்தவங்க ஓரங்கட்டி உக்காந்துடுவாங்க. உணவு, ஓட்டல், லாட்ஜ், ஜவுளி, டிராவல்ஸ் துறைகளில் இருக்கறவங்களுக்கு லாபம் கூடும். குடும்பத்தில ஒற்றுமையும் பொருளாதார உயர்வும் உண்டாகும். பெண்களுக்கு ஆரோக்கியம், வழிபாடு, சந்தோஷம் உண்டாகும்.

**கன்னி:** எடுத்த காரியங்களில் வெற்றி தான்னு இருந்தாலும் கொஞ்சம் பிரச்னைகள் இருக்கும். பர்ஸை ஜாக்கிரதையா பாத்துக்கங்க. செலவு இட்டங்கள் கியூவில வந்துகிட்டிருக்கு. அலுவலகத்தில் சுமுகமாகப் பேசிப் பழகறதுதான் நல்லது. கலை, நாடகம், சினிமா துறைகள்ல இருக்கறவங்களை சான்ஸ் தேடி வரும். குடும்பத்தில மகிழ்ச்சிதான், ஆனாலும் அடிச்சிக்கறதையும், கடிச்சிக்கறதையும் குறைச்சுக் கோங்க.

**துலாம்:** தெய்வபலம், தெய்வீகப் பணிகளில் ஈடுபாடுன்னு இருக்கறதால சகல காரியங்களிலும் முன்னேற்றமும் மத்தவங்க ஆதரவும் இருக்கும். உத்தியோகத்தில் உங்களை நேரடியா எதிர்க்கிறவங்க விலகி வழிவிட்டுடுவாங்க. யந்திரம், காண்ட்ராக்ட், தோல் பொருள் கமிஷன் துறைகள்ல ஆதாயம் கிடை

கும். குடும்பத்தில் உற்சாகம், உல்லா சம்னு ஜமாய்க்கும். குடும்பத்தில் புது வரவு ஏற்படும். பெண்களுக்கு பொருள் சேர்க்கை உண்டாகும்.

**விருச்சிகம்:** உங்க ராசிக்கான கிரகங்கள் கூட்டணி அமோகமா இருக்கறதால துணிவும், தன்னம்பிக்கையும் கூடி வெற்றிகளைக் குவிப்பீங்க. எதிர்பாராத சந்திப்பும், முக்கியமானவங்க ஆதரவும் காத்துகிட்டிருக்கு. பயணங்கள்ல மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருங்க. எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், புத்தகம், தகவல் தொடர்பு துறைகளில் இருக்கறவங்களுக்கு லாபம் கிடைக்கும். குடும்பத்தில் எதிர்பாராத செலவுகள் காத்திருக்குன்னாலும், கவலைப்பட வேண்டாம். எதிலும் கொஞ்சம் நிதானமா யோசிச்சு முடிவெடுங்க. பெண்கள் ஆரோக்கியத்தில் கவனமா இருங்க.

# நடக்கும்!



மாணவர்களுக்கு வெற்றி காத்திருக்கு.

**தனுசு:** உங்க ராசியில் கிரகங்களின் கூட்டணித் லைவர் சூரியன் 5ல் உச்சமா தன், ராகுவுடன் சேர்ந்து குரு ார்வையும் பார்க்கிறதால. தளிவான மனநிலை, தாரான ான பண வசதி, முக்கியமானவங்க தரவுன்னு ஜமாய்க்கப் போறீங்க. கலை, ாடகம், நாட்டியம், சங்கீதம்னு ருக்கறவங்களுக்கு பெயர், புகழ் திகமாகி, வெளியூர் / வெளிநாடு பணம் கூட வாய்க்கும். குடும்பத்தில முகமான சூழ்நிலையும், சுபகாரிய யற்சிகளும் ஏற்படும். பெண்களுக்கு, டை, ஆபரணச் சேர்க்கை, உடன் ந்தவர் உதவி, உல்லாசப் பயணம்னு தோஷமான காலம்.

**மகரம்:** கிரக சஞ்சாரம் உங்க ராசிக்கு ஜ' போடறதால, உங்க எதிரிங்க சிப்னு ஆயிடுவாங்க. புதுப்புது முகங்கள் கிடைக்கும். உத்தியோ திலயும் மறைமுக, நேர்முக எதிர்ப்பு

கள் மறையும். இரும்பு, யந்திரம், கமிஷன், மருத்துவ துறைகள்ல அதிக லாபம் கிடைக்கும். சட்டம், ராணுவம், காவல் துறையினருக்கு முன்னேற்றமான காலம். குடும்பத்தில் எல்லா வகையிலும் மகிழ்ச்சிதான். பெண்களுக்கும் மாணவர்களுக்கும் வெற்றிகரமான நேரம்.

**கும்பம்:** தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு கூடி, துணிவும், தெளிவும் உங்களை வெற்றிக் கொடி கட்ட வைக்கும். புது முயற்சிகளை மட்டும் இப்போதைக்கு தள்ளிப் போடுங்க. கலைத் துறையினர் புது ஒப்பந்தங்களுக்குத் தயாரா இருங்க. ஓட்டல், டிராவல்ஸ், புத்தகம், காவல் துறையினருக்கு முன்னேற்றமும், லாபமும் உண்டாகும். குடும்பத்தில் மகிழ்ச்சிகரமான திருப்பங்கள் காத்திருக்கு. திருமண முயற்சிகள் நின்னு போயிருந்தா தடைகள் நீங்கி நல்லபடியா முடியும். பெண்களுக்கும், மாணவர்களுக்கும் வெற்றி மேல் வெற்றியா குவியும்.

**மீனம்:** வரவுக்கு மேல் செலவு, சின்னச் சின்ன பிரச்னைகள்னு ஆரம்பத்தில் கொஞ்சம்

ராம்பூரில்
போட்டியிடும்
ஜெயப்ரதா (விருச்சிகம்)
யோசிச்சு
முடிவெடுக்கணுமாம்!

டல்லடிச்சாலும், போகப் போக சமாளிச்சுடுவீங்க. புதிய ஆட்களிடம் ஜாக்கிரதையா பழகுங்க. உத்தியோகத்தில் கடினமான வேலைகளைத் திறமையா செஞ்சு வெற்றியும் பாராட்டும் பெறுவீங்க. ரெடிமேடு, டிராவல்ஸ், எலக்ட்ரிகல்ஸ், கட்டடப் பொருள்கள், வியாபாரம் லாபம் தரும். அரசியல்வாதிகள் நிதானமா இருக்கறது நல்லது. குடும்பத்தில் உற்சாகம் இருந்தாலும், குழந்தைகளால செலவுகள் காத்திருக்கு. பெண்களுக்கு அமைதியும், சந்தோஷமும் கூடும்.

# ரஜினி வாய்ஸ் - என்ன

## ▪ நீங்கள் கேட்டவை-தராசு ▪

● எம். திருமலை, நாமக்கல் ❒

*? இந்தியா ஒளிர்கிறது, சரி. அப்புறம் ஏன் இலவசச் சேலை கொடுக்க வேண்டும்? ஏன் பத்தாயிரம் ஏழைகள் அதைப் பெற முண்டியடித்துக் கொள்ள வேண்டும்? ஏன் அதில் சிலர் இறந்துபோக வேண்டும்...? முரண்பாடாக இல்லை?*

! முரண்பாடுதான். ஒன்றா இரண்டா, இது போல் ஓராயிரம் முரண்பாடுகள். ஒரு பக்கம் அன்னியச் செலாவணி கையிருப்பு அதிகரிக்கிறது. மறு பக்கம் ஏழை விவசாயி அவதிப் படுகிறான். ஒரு பக்கம் இஸ்லாமியர் இல்லாமல் பா.ஜ.க. இல்லை என்று பிரதமர் சொல்கிறார். மறு பக்கம் 'பாபரி மசூதியை நொறுக்கிய எங்களுக்கு காங்கிரஸை நொறுக்கத் தெரியாதா?' என்று கேட்கிறார் அமேதியின் பா.ஜ.க. வேட்பாளர் வேதாந்தி. ஒரு பக்கம் வாஜ்பாயின் அனுபவம் யாருக்கு வரும் என்று கேட்டுப் பிரசாரம், மறு பக்கம் அரசியல் அரிச் சுவடி அறியாத பிரசாரகர்களின் அணி வகுப்பு... இதையெல்லாம் மறைத்து நம் பார்வையை திசைதிருப்பத் தான் 'ஒளிர்கிறது' கோஷம்!



• வாழ்த்திப் பேசினார்!



• பலமும் பலவீனமும்...

● லதா ரங்கன், சென்னை - 94 ★

*? மிகக் குறைந்த இடங்களில் போட்டியிடும் கட்சிகள்கூட தேர்தல் அறிக்கை வெளியிடுகின்றனவே... அவற்றால் என்ன பயன் விளையும்?*

! பயன் விளையாவிட்டாலும் ஒரு கருத்து அல்லது கண்ணோட்டம் - பதிவாகும். செயல்திட்டம் விவரிக்கப்படும். வளரும் ஜனநாயக அமைப்பில் இவ்வாறு பலதரப்பட்ட கருத்துப் பதிவுகளுக்கு இடமளிப்பது முக்கியம்.

● ஜி.பி. வைத்யநாத ஷர்மா, திருவண்ணாமலை

*? தேர்தல் முடியும்வரை எந்த பத்திரிகையும் படிக்க வேண்டாம் என பா.ம.க. ராமதாஸ் கூறியுள்ளாரே...?*

! பத்திரிகைகளின் செல்வாக்கையே இது உணர்த்துகிறது.

● டி.சிவகுமார், மைசூர் - 20

*? மகளிர் சுய உதவிக் குழுக்களின் கூட்டம் தேர்தல் முடியும்வரை நடைபெறக்கூடாது என மத்திய தேர்தல் கமிஷன் தடைவிதித்துள்ளதே...?*

! இக் குழுக்கள் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்தப்படக் கூடும் என்ற வலுவான சந்தேகத்தின் பேரில் விதிக்கப்பட்ட நியாயமான தடை. ஒரு சில குழுவினர் இத்தடை மூலம் தங்கள் உரிமைகள் பறிக்கப்படுவதாகக் குரல் கொடுப்பது சரியல்ல. தேர்தல் முடியும்வரைதானே தடை...?

● டேவிட் ராஜா, சென்னை - 11

*? ரஜினியின் வாய்ஸ் பயனளித்தது யாருக்கு...? பா.ஜ.க.வுக்கா? அல்லது வருகிற சட்டமன்றத் தேர்தலின்போது உதவுமா? அல்லது அடுத்த ரஜினி படத்துக்காவது உபயோகப்படுமா?*

! 'வாய்ஸ்' வெறும் 'நாய்ஸ்' ஆகிப் போனதால், அதன் பயன் சிலபல பத்திரிகைப் பிரதிகள் கூடுதலாக விற்பனையானதோடு நின்றுவிட்டது!

# ...யன்?



• 'வாய்ஸ்' கொடுத்தார்!



• 'தடா' போட்டார்!



• நெருடல் மரணம்!



• உரலும் தலையும்!

• **எம்.அசோக் ராஜா, திருச்சி - 15**

*? டான்டன், தேர்தல் ஏஜெண்ட் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டுள்ளது பற்றி..?*

! தேர்தல் கமிஷன் விளக்கம் கேட்கிற வரை காத்திராமல் உடனே விலகியிருந்தால், அது வருத்தத்தின் அடையாளமாக அமைந்திருக்கும். கமிஷன் விளக்கம் கேட்ட பிறகு வேண்டா வெறுப்பாக ராஜினாமா செய்வது, கட்சிக்கும் பிரதமருக்கும் அகௌரவம்.

• **பி. ஜோதி, சென்னை - 47**

*? நடிகை சௌந்தர்யாவின் மரணத்தில் ஏதோ நெருடல் தெரிகிறதே...?*

! ஆமாம்! அழகான முகம் என்ற ஒரே காரணத்துக்காக நடிக / நடிகையர்களைத் தேர்தல் பிரசாரத்துக்கு வளைத்துப் போடுவது எவ்வளவு சரி, என்ற கேள்வியின் நெருஞ்சி முள் நெருடல்!

• **என். சுப்பிரமணியன், கடையம்**

*? வற்றல் குழம்பும் வேப்பம்பூ ரஸமும் அப்படி என்ன மோசமா சார்..? (29.3.04 கேள்வி பதில் பாருங்கள்...)*

! அதிகச் செலவில்லாமல் செய்யலாம் என்பதற்காக மாசக் கடைசி சமையலுக்கு கசந்த ஐட்டங்களை உதாரணம் சொன்னேன். அதற்கென்ன, பிடிச்சவங்க தினமும் சாப்பிட்டுக்க வேண்டியதுதான். மாசக் கடைசி திண்டாட்டமே இராது!

• **ஷோபனாதாசன், நாட்டரசன் கோட்டை**

*? தி.மு.க.வுடனான கூட்டணியைவிட இப்போதைய அ.தி.மு.க.வுடனான கூட்டணி உறவு சிறப்பாக உள்ளது என்கிறாரே இல. கணேசன்?*

! அப்படி ஒரு மாயையில் உழல்வதைத் தவிர அவருக்கு வேறு என்ன வழி..? உரலில் தலையைக் கொடுத்த பிறகு உலக்கைக்கா பயப்பட முடியும்?

• **என். சுகுமாறன், காரைக்கால்**

*? அரசு ஊழியர்களின் வோட்டு அ.தி.மு.க.வுக்கு விழுமா..?*

! அரசு ஊழியரிடம் போய்க் கேட்டுப் பாருங்கள்... விழும்!

• **பி. சிவக்குமார் பிரபு, திருப்பூர்**

*? தமிழக அரசின் தற்போதைய பலம் எது? பலவீனம் எது..?*

! பலம் : அதிகாரம். பலவீனம் : அதிகாரம்!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
எம்.திருமலை,
5/240, ஆசிரியர் குடியிருப்பு,
மோகனூர் ரோடு,
நாமக்கல் - 637 001.

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
லதா ரங்கன்,
14, மைனர் டிரஸ்ட்புரம்,
முதல் குறுக்குத் தெரு,
சூளைமேடு, சென்னை - 94.

சூளைமேடு சூப்பர் ஸ்டாராகியிருக்கிறார் பாலாஜி! திருவிழாக் கூட்டம்தான் இவர் வீட்டு முன்பு! ஆட்டோகிராஃப் வாங்க, ஃபோட்டோ எடுக்க, சும்மா பேசிட்டுப் போக என்று வாண்டுகளிலிருந்து வயதான அம்மாக்கள் வரை க்யூவில்!

"பாகிஸ்தான்காரங்களைப் பிச்சிட்டீங்க பாஸ்" என்று கதையாடிக் கொண்டிருந்த சாஃப்ட்வேர் மாணவிகளைப் பார்த்து, வெட்கமாகச் சிரிக்கிறார் பாலாஜியின் அம்மா.

"அண்ணா... எங்களோட ஒரு க்ரூப் போட்டோ" என்று அழைத்த வாண்டுகளை அப்படியே அணைத்து, தமது 'ட்ரேட் மார்க்' சிரிப்புடன் போஸ் கொடுத்துவிட்டு வந்தார் பாலாஜி.

"வரலாற்று வெற்றி பெற்ற



# "பிச்சிட்டீங்க

அணியில நானும் இருந்தேன் கிறது மகிழ்ச்சியா இருக்கு. இனி ஒவ்வொரு முறையும் கிரிக்கெட் வரலாறு திருப்பிப் பார்க்கப்படும்போது, அதுல நானும் இருப்பேங்கறது பெருமையான விஷயம்தானே..!

"கிரிக்கெட்டைப் பொறுத்தவரை சின்ன வயசுலயே பெரிய வேட்கை, தாகம்னு இருந்ததில்லை. தெருவுல ஆடிட்டு இருந்தவன்தான். 1999ம் வருஷம் சென்னையில ஆஸ்திரேலியாவுடனான டெஸ்ட் மேட்ச் நடந்தது. அந்த மேட்சைத்தான் முதல் தடவையா நேர்ல போய்ப் பார்த்தேன். சச்சின் ஆடியவிதமும், மெக்ராத்தோட பௌலிங்கும் எனக்குள்ள ஆசையை விதைச்சது. பிறகுதான் கிரிக்கெட் மேல அதிக ஆர்வம் காட்ட ஆரம்பிச்சேன். முறையா படிச்சேன். தினமும் பயிற்சி. கஷ்டம் பார்க்காம உழைப்பு. ரஞ்சி போட்டியில அதிக விக்கெட்டுகளை அள்ளினேன். இந்த விக்கெட்டுகள் தான் இந்திய அணிக்கு என்னைக் கொண்டு போச்சு. சச்சின் ஆடறதைப் பார்த்திட்டிருந்த நான், அவரோடயே ஆடினது சுகம்."

- ஃப்ளாஷ்பேக் சொல்லிவிட்டு நிமிர, கதவுத் தட்டப்படுகிறது. ஆட்டோகிராஃப், சின்ன பேச்சு, கைகொடுத்தல், சிரிப்பு, அவர்களை அனுப்பிவிட்டு வந்தார் பாலாஜி.

"பாகிஸ்தான்ல முஷாரஃபைச் சந்திச்சது நல்ல அனுபவம். பேப்பர்லயும் டி.வி.யிலயும் பார்த்திட்டிருந்த ஒரு கம்பீரமான மனுஷரை, நேர்ல பார்த்ததும் கொஞ்சம் பதற்றம் இருந்தது. "உங்களோட பந்து வீச்சையும், பேட்டிங்கையும் ரசிச்சேன். வாழ்த்துகள்"ன்னார். இதை நல்ல அங்கீகாரம்னு நினைக்கிறேன்.

"அப்புறமா வாக்கர் யூனுஸைச் சந்திச்



# பாஸ்!''

சேன். சின்ன சந்திப்புதான். பௌலிங் டிப்ஸ் கொடுத்தார். உபயோகமா இருந்தது.

"பாகிஸ்தான்ல சாப்பாடுதான் எனக்கு கொஞ்சம் சிக்கல். சிக்கல்னா பெரிசா எதுவுமில்லை. எல்லாத்திலேயும் எண்ணெய் அதிகம். எல்லோருமே அதிக ஆயிலோட சாப்பிறதைத்தான் விரும்பறாங்க" என்கிற பாலாஜியிடம், "மற்ற மேட்ச்களைவிட பாகிஸ்தானுடனான மேட்ச் ஸ்பெஷல்னு சொல்றாங்களே?'' என்றோம்.

"இது நாமா ஏற்படுத்திக்கிட்டதுன்னு நினைக்கிறேன். ரசிகர்கள் மத்தியில இப்படி இருந்தாலும், இரு நாட்டு ப்ளேயர்ஸ் மத்தியில எந்த வேறுபாடும் இல்ல. எல்லாருமே நல்லாப் பழகுறாங்க."

மூன்றாவது ஒரு நாள் போட்டியின் போது, அக்தர் பந்தை ஆறு, நான்குகள் என்று பாலாஜி பதம் பார்க்க, எரிச்சலடைந்த அக்தர் ஏதோ திட்டினாரே, "என்ன?" என்றால் "அப்படியா?'' என்கிறார் எதுவுமே நடக்காதது மாதிரி.

''பந்து வீச்சாளர்கள் ஒவ்வொரு பந்தையும் விக்கெட் எடுக்கணுங்ற நோக்கத்துலதான் வீசுறாங்க. ஆனா அது பவுண்டரிகளாகவும், சிக்ஸர்களாகவும் மாறும்போது, கொஞ்சம் வருத்தம் இருக்கும். சில பேருக்கு அது கோபமாகவும் மாறலாம். அந்த நேரத்துல ஏதாவது திட்டினா, பேட்ஸ்மேனோட மனநிலை மாறும். தவறான பந்தை வேகமாக அடிக்கச் சொல்லும். அது விக்கெட்டா மாறுங்கற எண்ணம் பௌலர்களுக்கு இருக்கலாம். நான் இந்த மாதிரி டெக்னிக் எல்லாம் பயன்படுத்தறது இல்லை'' சிரிக்கிறார் பாலாஜி.

''கிரிக்கெட்ல ஒவ்வொரு நாள் ஆடும்போதும், புதுசா கத்துக்க நிறைய விஷயம் இருக்கு. மேற்கிந்திய தீவுகளுக்கு எதிரா முதன்முதலா நான் களமிறங்கியதும், நிறைய ரன்களை விட்டுக் கொடுத்தேன். எனக்கே ரொம்ப வருத்தம்தான். ஆனா மனசைத் தளரவிடலை. அந்த மேட்ச்ல நிறைய கத்துக்கிட்டேன். இன்னும் அதிகமா தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு. ஒவ்வொரு ஆட்டத்திலேயும் முழுத் திறமையோட ஆடணும்னு நினைக்கிறேன்'' என்கிற பாலாஜி, பாகிஸ்தானில் பர்சேஸ் பண்ணியது டி.வி.டி.களை!

"பின்னே, சரியான சினிமாப் பைத்திய மாச்சே!" செல்லமாகச் சொல்கிறார் பாலாஜியின் அம்மா...!

- ஏக்ஜி

படங்கள் : ஸ்ரீஹரி

# சின்னஞ்சிறு

## ▪ திருப்பூர் கிருஷ்ணன் ▪

மனித இனத்திலிருந்து மிகவும் வேறுபட்டதாக, உயர்ந்ததாக, சிறப்பானதாக புதியதோர் ஜீவ இனத்தைத் தோற்றுவிக்க இயற்கை முயன்று கொண்டிருக்கிறது. இந்தப் புதிய ஜீவ இனம், அஞ்ஞானத்திற்கு அடிமைப்பட்டிராமல், தெய்வீக ஒளியுடன் கூடியதாக இருக்கும். இந்த உண்மையை மனிதர்களுக்கு எடுத்துச் சொல்லவே ஸ்ரீஅரவிந்தர் இப்பூவுலகில் அவதரித்தார். அவர் புவியில் இருந்த நாளெல்லாம் அவர் அதிமனம் என்றழைத்த இந்த மெய்யுணர்வைத் தம்மில் நிலைநாட்டவும், தம்மை அண்டினோர் அனைவரும் அதை அடையவும், தம் வாழ்வின் பெரும்பகுதியைச் செலவிட்டார்.

('பகவான் ஸ்ரீ அரவிந்தர்' என்ற நூலில் எழுத்தாளர் ஜனகன்)

அரவிந்தரின் தந்தை டாக்டர் கோஷுக்கு தம் பிள்ளைகள் நடத்தை, கல்வி, மொழி போன்ற எல்லாவற்றிலும் ஆங்கில மயமாக மாற வேண்டும் என்று தணியாத ஆவல்! தாய்மொழியைத் தம் குழந்தைகள் படித்து விடாமல் அவர் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டார்! இப்படிப்பட்ட ஆவல்கள் அடிமைப் பட்ட பாரதத்தில் அன்று பலருக்கும் இருந்தது இயல்புதானே!



• அன்னை ஸ்வர்ணலதா

• தங்கை சரோஜினி

கனவான்களிடையே பழகவும், பொருளாதார ரீதியாக முன்னேறவும் ஆங்கிலேயரை நகலெடுத்தாற்போல் வாழ்வது தானே சுலபமான ஒரே வழி!

டாக்டர் கோஷ் கொல்கத்தாவில் டாக்டர் படிப்புப் படித்து, தொழில் செய்து வந்தார். பின் இங்கிலாந்துக்குச் சென்று மேற்படிப்புப் படித்துப் பல பட்டங்களுடன் திரும்பி வந்தார்.

இந்தியா மேலைக் கலாசாரத்திற்கு அடிமைப்படத் தொடங்கிய காலகட்டம் அது. இந்தியர்கள் ஆங்கிலேயர்கள் போல் உருமாறிக் கொண்டிருந்த நேரம். இந்திய நாகரிகம் மேலை நாகரிகமாக மாறத் தொடங்கிய விபரீதமும் நேர்ந்தது. ஆங்கிலச் சிந்தனைகள் குடிபுகத் தொடங்கின. உலகாயத வாழ்வை மீறிய வாழ்வொன்று உண்டு என்பதும், இந்தியச் சிந்தனை மரபு அது சார்ந்தது என்பதும் மறக்கப்படலாயின.

மிக உயர்ந்த வேதநெறி, மூட நம்பிக்கைகளின் மொத்தத் தொகுப்பாக மாறியிருந்த காலகட்டம் அது. மனிதாபிமானமற்ற செயல்கள் மதம் என்ற போர்வையோடு அனுசரிக்கப்பட்டன. அரவிந்தரின் சம காலத்திலும் அதை அடுத்தும், தமிழில் பாரதி, பாரதி

அரவிந்த அமுதம்

# மலர்!

4



• தந்தை கிருஷ்ணகோஷ்



• ஸ்ரீ அரவிந்தர்

தாசன், கல்கி போன்றோர் கைம்பெண்களுக்கெதிரான கொடுமையை எதிர்த்து உரத்துக் குரல் கொடுத்தார்கள். டாக்டர் கோஷ் இந்தியக் கலாசாரமே மூடத்தனங்களின் மொத்தத் தொகுப்புத்தான் என்ற தவறான கருத்தோட்டத்துக்கு வந்து சேர்ந்தார். இந்துமதத்தின் மூட நம்பிக்கைகளை எதிர்த்த ராஜாராம் மோகன்ராயும், அவர் தோற்றுவித்த பிரம்ம சமாஜமும் கோஷைக் கவர்ந்ததில் ஆச்சரியமில்லை. உலகின் மாபெரும் சிந்தனாவாதிகளில் ஒருவ

ரான விவேகானந்தரையே ஈர்த்த அமைப்பல்லவா பிரம்ம சமாஜம்!

கோஷ் இந்து முறைப்படி அல்லாமல், பிரம்ம சமாஜ முறைப்படித்தான் திருமணமே செய்து கொண்டார். தம் குழந்தைகள் எல்லோரும் இந்தியக் கலாசாரத்தைச் சற்றும் அறியாத, ஐரோப்பியப் பதிப்புகளாக உருவாக வேண்டும் என்று விழைந்தார். ஆனால் காலம் இந்தியக் கலாசாரத்தின் ஒட்டுமொத்தப் பிரதிபலிப்பாக அவர் மகன் அரவிந்தரை உருவாக்கி, அவரை தெய்வமாகவே பரிணமிக்கச் செய்த விந்தையை என்ன சொல்ல!



டார்ஜிலிங்கில் ஐரோப்பியக் குழந்தைகளுக்கென நிர்மாணிக்கப்பட்டிருந்த லோரெட்டோ கான்வென்ட் பள்ளியில், ஐந்து வயதிலிருந்து இரண்டாண்டுகள் கல்வி பயின்றார் ஸ்ரீஅரவிந்தர். உடன் அவரது மூத்த சகோதரர்களான வினய பூஷண், மன்மோகன் ஆகியோரும் கல்வி கற்றார்கள். சின்னஞ்சிறு வயதிலேயே பெற்றோரைப் பிரிந்து விடுதி வாசம்.

அங்கே குழந்தைகள் இரவு உறங்குவதற்கென்று ஒரு தனிக் கூடம் உண்டு. வழக்கமாய் கதவுக்குப் பக்கமாகப் படுத்துத் தூங்குபவன் அரவிந்தரின் அண்ணா மன்மோகன்தான். வெளியே போன யாரோ ஒருவர், ஒருநாள் இரவு சற்றுத் தாமதமாக வந்தார். தடதடவென்று கதவைத் தட்டினார். 'நான் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறேன். என்னால் கதவைத் திறக்க இயலாது!' என்று சத்தம் போட்டுச் சொன்னானாம் சின்னக் குழந்தை மன்மோகன்! பின்னாளில் அரவிந்தர் நகைத்துக் கொண்டே இதைச் சொல்லி மகிழ்வதுண்டு.



• மன்மோகன் - வினயபூஷண்

குழந்தைப் பருவத்தில் சொல்லப்படும் மழலைப் பொய்கள்தான் எத்தனை அழகானவை!

அரவிந்தர் தம் சிறு வயது நிகழ்ச்சியாக இன்னொன்றையும் நினைவு கூர்வார். அது தேவகட்டம் என்ற இடத்தில் நடந்தது. ஒருநாள் எல்லாப் பேரக் குழந்தைகளும் தாத்தாவுமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். திடீரென்று பார்த்தால் அரவிந்தரைக் காணோம். அவர்கள் திகைத்துப் போய், நடந்த வழியே அரவிந்தரைத் தேடிக் கொண்டு திரும்பினார்கள். அரவிந்தர் ஓர் இடத்தில் சிலை போல் நின்று கொண்டிருந்தார். நின்ற நிலையிலேயே அசைவேயில்லாமல் உறங்கிக் கொண்டிருந்தாராம்.

அது உறக்கமா, இல்லை சமாதி நிலையா! யார் அறிவார்! ஏழே வயது நிறைந்த ராமகிருஷ்ணர் காமார்புகூர் வயல்வெளி ஒன்றில் உல்லாசமாய்ச் சென்று கொண்டிருந்தபோது, மேகக் கூட்டங்களையும் வானைக் கிழித்துச் சென்ற வெண்ணிற நாரைகளையும் பார்த்து, தம் வாழ்விலேயே முதன்முறையாக சமாதியில் ஆழ்ந்தாரே, அதையறிந்து தம் மகனுக்கு வலிப் நோயின் ஆரம்ப அறிகுறி தோன்றியுள்ளதோ என்றல்லவா கவலைப்பட்டது பரமஹம்சரின் தாய் சந்திராதேவியின் பெற்ற மனம்?

அரவிந்தர் டார்ஜிலிங்கில் இருந்த போது ஒருநாள் அவருக்கு ஒரு விந்தையான கனவு வந்தது. அவர் படுத்து

## அருள்வாக்கு



முதலில் ராஜாங்கப் பதவியில் உள்ளவர்கள் தர்மசீலர்களாய் இருக்க வேண்டும். 'இவர்கள் செய்வதும் சொல்வதும் சொந்த நன்மைக்காக அல்ல; நம் நன்மைக்காகத்தான்' என்று ஜனங்கள் நம்பிக்கை வைக்கக்கூடிய தர்மிஷ்டர்கள் தர்மப்படியே ராஜாங்கம் நடத்த வேண்டும். தர்மிஷ்டர்கள் தர்மங்களைச் சாந்தமாக எடுத்துச் சொன்னால் ஜனங்கள் அதன்படியே நடப்பார்கள்.

ராஜாங்கத்தார் மட்டும் இந்தக் குற்றமே இல்லாமல் ஆக்குகிற காரியத்தைச் செய்ய முடியாது. தர்மசீலர்களான மற்றவர்களும் சேர்ந்து இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். இவ்வாறு தர்மிஷ்டர்கள் கைங்கரியம் செய்வதற்கு அனுகூலமான சூழ்நிலையை ராஜாங்கம் ஏற்படுத்தித் தர வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

கொண்டிருந்தார். அப்போது பிரம்மாண்டமான தமஸ் (தமோ குணம்) அவருள் விரைந்து பாய்ந்து, அவரை முழுவதுமாய் அள்ளி மூடிக் கொண்டது. அது மட்டுமா! உலகம் முழுவதையுமே அந்தத் தமோகுணம் போர்வைப் படலமாய்ப் பாய்ந்து மூடி விட்டது.

பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்ட போது, அந்த அடி சிவன் முதுகில் மட்டுமா சுளீரென்று விழுந்தது! 'சிவனே' என்றிருந்த எல்லா மானிடர் முதுகிலும் கூட விழுந்ததல்லவா! அதை விழாமல் தடுக்க யாருக்குச் சக்தி உண்டு! அன்று விழுந்த அடியின் தழும்புதான் இன்றும் முதுகில் காணப்படும் நடுப்பள்ளம் என்பதுண்டே!

அகில உலகத்திற்குமாகத் தவம் நிகழ்த்தப் போகும் அரவிந்தப் பெருமகனைத் தமோகுணம் மூடினால், உலகனைத்தையும் அது மூடியதாகத்தானே அர்த்தம்! "பிறகு நான் இந்தியாவிலிருந்து இங்கிலாந்து போய் அங்கே வசித்த காலம் முழுவதும், ஓர் இருள் என்னிடம் அழுத்தமாக வந்து ஒட்டிக் கொண்டிருந்தது. அந்த இருளுக்கும், டார்ஜிலிங்கில் என்னை மூடிய தமோ குணத்திற்கும் தொடர்பிருந்தது என்பதை உணர்ந்தேன். மறுபடி நான் பாரதம் வந்த போதுதான் அந்தத் தமோ இருள் என்னை விட்டு முழுமையாக விலகி நீங்கிற்று" என்று பிறகு நினைவுகூர்ந்திருக்கிறார் அரவிந்தர்.

லோரெட்டோ பள்ளியில் இரண்டாண்டுகள் படிக்கச் செய்தபின், அரவிந்தரின் பெற்றோர் அரவிந்தர் உள்ளிட்ட தம் மூன்று குழந்தைகளையும் இங்கிலாந்துக்குக் கூட்டிச் சென்று விட்டார்கள்.

அரவிந்தரின் தந்தை இங்கிலாந்து சென்று திரும்பியதும், கடல் கடந்த குற்றத்திற்காக அவர் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும் என்றும், இல்லையென்றால் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்படுவார் என்றும் அன்றைய இந்து சமுதாயம் அவரை எச்சரித்ததே... என்ன செய்தார் டாக்டர் கோஷ்? பிராயச்சித்தம் செய்தாரா, இல்லை ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டாரா? வளமான குடும்பத்தில் பிறந்து, கல்வி கற்பதன் பொருட்டு பெற்றோரைப் பிரிந்து இங்கிலாந்தில் வாழ்ந்த ஸ்ரீஅரவிந்தர், இங்கிலாந்தில் ஒருவேளை உணவுக்குக் கூடக் கஷ்டப்பட வேண்டிய நிலை நேர்ந்ததே.... அது ஏன்? எப்படி?

(அமுதம் பெருகும்)



# கில்லி

**மா**நில அளவிலான கபடிப் போட்டியில் கலந்து கொள்ள, சென்னையிலிருந்து மதுரைக்குச் செல்கிறார் கதாநாயகன் விஜய். போன இடத்தில் கபடிக்குப் பதிலாக, வில்லன் கும்பல் துரத்தும் வில்லங்கமான ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ள வைக்கிறது விதி.

கடைசிக் காட்சி வரை வில்லனுக்கும், ஹீரோவுக்குமான துரத்தல், கைகலப்பு என்பதாகவே முழுப்படமும் நகர்வதால், முன்வரிசை ரசிகர்களின் முதுகைச் சொறிந்துவிடும் மிகைப்படுத்தல்களின் மொத்த உருவமாக வந்திருக்கிறது கில்லி.

மூட்டைப் பூச்சிகளை கட்டை விரலால் நசுக்கிக் கொல்லும் அசாதாரண மனநிலையோடு, மக்கள் கூடும் பொது இடத்தில் குண்டர்படை சகிதம் கொலைகளைச் செய்கிறார் மாண்புமிகு வில்லன். (அப்பா மாநில அமைச்சராம்) இப்படியொரு ரவுடியை தமிழகத்தின் எந்தக் கோடியில் தேடினாலும் கிடைக்கமாட்டார். ஹீரோவோ, வில்லனை விடப் பராக்கிரமசாலி. அவர் வசிப்பது திருவல்லிக்கேணி பகுதி. என்ன தான் குறுகலான தெருக்கள் அங்கே உண்டென்றாலும், மொட்டை மாடியிலிருந்து அவர் தெருவைப் பறந்து கடப்பது போன்ற அபத்தங்களை கிராபிக்ஸ் துணையோடு காட்டி, ஏற்கெனவே மழுங்கிக் கிடக்கும் தமிழ் ரசனையை தெலுங்கு மயமாக்க ('ஒக்கடு' தெலுங்குப் படத்தின் தமிழ்ப்பதிப்புதான் கில்லி) முயற்சிக்கிறார்கள்.

ஆடுகளத்தில் கபடி வீரர்களை உதைப்பது, தாக்குவது, பிளேடால் கிழிப்பது என வீர விளையாட்டின் விதிமுறைகளை அவமானப்படுத்தும் விதமாக, அவற்றை இஷ்டத்திற்கு வளைத்திருப்பதைக் கண்டிக்கும் அதே நேரம், கபடி மேட்சைப் படமாக்கிய விதத்தில் ஒளிப்பதிவாளர் கோபிநாத்தை முதல் வரிசைக் கலைஞர்களோடு ஒப்பிட்டுப் பாராட்டலாம்.

திருவல்லிக்கேணியை, கலங்கரை விளக்கத்தோடு இடம் பெயர்த்தது போல கலை நிர்மாணம் செய்திருக்கும் மணி ராஜுவும் கவனத்தை ஈர்க்கிறார்.

நிஜமான மனித உணர்ச்சிகளை ஒப்புக்குச் சப்பாணியாக்கிவிட்டு, அதீதங்களை மட்டுமே காட்சிக்கு காட்சி அரங்கேற்றி இருக்கும் இது போன்ற இறக்குமதிகள், தனித்துவத்தோடு தலையெடுக்க முயற்சிக்கும் தமிழ் சினிமாவுக்கு மரண அடியாக முடியலாம்.

**- விஷ்ணுவல்தாசன்**

மே. 2 - 2004

# மினி கல்கி



ஓவியர் மருது

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எல்.அஷோக்

டாக்டர் எல்.மகாதேவன்

சமையல் தோட்டக்கலை நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்

## ஆள் பாதி ஆடை பாதி!

மீரா நந்தகுமார்



• மீரா நந்தகுமார்

"உடுத்தறதுலே என்னங்க இருக்கு? எது கிடைக்குதோ அதை போட்டுக்குவேன். டிரஸ் விஷயத்துலே ரொம்ப அக்கறை செலுத்தறது வேஸ்ட்டுங்க" என்று யாராவது சொல்லிக் கொண்டிருந்தால், அவரிடம் இந்த 'மினி கல்கி'யைக் கொடுத்துப் படிக்கச் சொல்லுங்க. சிறப்பு இணைப்பை, தான் எடுத்து வைத்துக் கொண்டு, மெயின் புத்தகத்தை உங்களிடம் நீட்டுவார்.

*'God makes a man, Tailor makes him a gentleman'* என்பது நூற்றுக்கு நூறு சரியே! ஒரு மனிதனுக்கு உடல் ரீதியாகவும், மன ரீதியாகவும் மகிழ்ச்சியும், மகத்துவமும் தரக் கூடியது அவன் அணியும் அழகான ஆடைகளே!

ஆடைகள் பற்றி மேலும் சில டிப்ஸ் தருகிறார் அசோக் நகரில் உள்ள 'கோராஸ்' ஃபேஷன் டிஸைனர் மீரா நந்தகுமார்.





"எனக்குத் தெரிந்த ஒரு கட்டட காண்ட்ராக்டர் எங்கள் வீட்டுக்கு வரும்போது, சாதாரண உடை அணிந்து வருவார். அதுவே, ஒரு பிஸினெஸ் பேச அவரை அழைத்துக் கொண்டு போனபோது, ஆளே பளபள என்று மாறிப் போயிருந்தார்.

மடிப்புக் கலையாத பேண்ட், 'இன்' செய்யப்பட்ட விலையுயர்ந்த

ஷர்ட், மினுமினு ஷூ, பெல்ட், மோதிரம், பிரேஸ்லெட் என ஷோக்காக வந்திருந்தார். ஆளைப் பார்த்ததுமே 'சவுண்டு பார்ட்டி' என்ற முடிவுக்கு வந்த வீட்டு உரிமையாளர், காண்ட்ராக்டரின் கலகலப்பான பேச்சிலும் மயங்கி, அவருக்கே வீட்டு கட்டுமான வேலையைத் தர முடிவு செய்தார்.

''மேடம்... உங்களுக்கு என்னுடைய திறமை தெரியும். அதனால் நான் எப்படி உடுத்தியிருந்தாலும் டீஸண்டாகவே தெரியும். இப்பப் போனது புது இடம். இப்படி பந்தாவா டிரஸ் பண்ணிக்கிட்டுப் போனதால்தான், சமமா உட்கார்ந்து பேசவே செஞ்சாங்க. இல்லாட்டி, நிக்க வைச்சே பேசியிருப்பாங்க.'' என்றார். அது நிஜம்தான்.

முன்பின் தெரியாதவர்களிடம் முதல் அபிப்ராயத்தைப் பெற்றுத் தருவது, நாம் அணியும் ஆடைகளே!

''புருஷனும் பெண்டாட்டியும் பார்க்க ரொம்ப டீஸண்டா இருந்தாங்க. அந்தம்மா பட்டுப் புடைவை கட்டிக்கிட்டு இருந்தாங்க. அவரு சஃபாரி டிரஸ் போட்டிருந்தாரு. ''இந்த சூட்கேஸைப் பார்த்துக்கோங்க''னு சொல்லிட்டு, கீழே இறங்கி ஒரு காபி குடிச்சுட்டு வர்றதுக்குள்ளே, இரண்டு பேரும் எஸ்கேப்! சூட்கேஸைக் கிளப்பிட்டுப் போயிட்டாங்க ஸார்'' என்று புலம்புபவர்களைப் பார்த்திருக்கோமே!



நல்ல உடைகளைப் பார்த்தால், ''நல்லவங்க, தவறு செய்ய மாட்டாங்க'' என்று நாமே நம்புகிறோமே!

எனவே, உடைக்கு முக்கியத்துவம் தர வேண்டிய அவசியத்தை, மனசுக்குள் வைச்சு, தைச்சுடுங்க!

மினி கல்கி

# உடைகள் எப்படி இருக்கணும்?

★ உங்க வயசுக்கும் தோற்றத்துக்கும் பொருத்தமா இருக்கணும்.

★ உங்களுடைய அன்றாடப் பணிகளுக்கும் மணி பர்ஸுக்கும் ஏற்றதா இருக்கணும்.

★ உங்களுக்கு மிகச் சௌகரியமாகவும், உங்களுடன் இருப்பவர்களுக்கு மிக மிக சௌகரியமாகவும் இருக்க வேண்டும்.

★ அதை அணியும்போது, உங்கள் அழகு கூட வேண்டும். "இந்த டிரஸ் எனக்கு நல்லா இருக்கு. எனக்கு புதுப் பொலிவு தருது" என்ற உணர்வே உங்களுக்கு சுய மதிப்பு தரும். சுய மதிப்பிருந்தால், தன்னம்பிக்கையுடன் காரியங்களை ஆற்றக் கூடிய சக்தி தானாகவே வரும்.

★ உங்கள் ஆடைகளை, உங்களைவிட, மற்றவர்களே அதிகம் பார்க்கிறார்கள். "உண்பது நமக்காக, உடுத்துவது பிறருக்காக!" என்று சொல்வதைக் கேட்டிருப்பீர்களே! எனவே, எதிராளிகளின் கவனம் சிதறாத வண்ணம், அவை அமைய வேண்டும். குறிப்பாக, மிகவும் அல்ட்ரா மாடர்ன் உடைகள் அணிந்து பொது இடங்களில் சென்றால், நாம் காட்சி பொருளாகி விடும் வாய்ப்பு இருக்கிறது. பிறரை மகிழச் செய்வதற்குப் பதில் நெளியச் செய்வதில் என்ன லாபம்! எனவே, பிறர் கண்களை உறுத்தாத விதத்தில், கண்ணியமாக உடுத்த வேண்டியது மிக அவசியம்.



★ காலம், நேரம், இடம், பொருள், ஏவல் என்பதெல்லாம் டிரஸ்ஸுக்கும் உண்டு. கோயில் கும்பாபிஷேகத்துக்குப் போகிறீர்கள். அப்போது கார்ட்ராய் ஜீன்ஸ், டீ ஷர்ட் அணிந்து போனால் பொருத்தமாக இருக்குமா? மத்தியான வேளை. உச்சி வெயில் மண்டையைப் பிளக்கிற நேரத்தில் கறுப்புக் கலரில் பாலியெஸ்டர் புடைவையும், வெல்வெட் பிளவுஸும் அணிவீர்களா? துக்கம் விசாரிக்கப் போகும்போது, வண்ண மயமாக டிரஸ் செய்து கொண்டு போகலாமா? கல்யாண ரிசப்ஷனுக்கு 'தாட்பூட்' என்று டிரஸ் செய்து கொண்டு போனால்தான், வீடியோக்காரர் நம்ம பக்கம் ஒரு நிமிஷமாவது திரும்புவார்.

★ வேஷம் போடாதீர்கள். நீங்கள் உங்களுக்குள் என்னவோ, அதையே உடையிலும் பிரதிபலிக்கட்டும், மிகவும் நேர்மையாக. எனக்குத் தெரிந்த பெண்மணி ஒருவர், நல்ல



பசையுள்ளவர்தான். ஆனால் மாம்பலம் ரங்கநாதன் தெரு போன்ற இடங்களுக்கோ, மார்க்கெட்டுக்கோ போகும்போது, நகைகளைக் கழற்றி வைத்து விடுவார். வெளுத்துப் போன புடைவையில் கிளம்புவார்.

''பளிச்னு போனா, ஆளைப் பார்த்து விலையைக் கூட்டிடுவான்'' என்பார்!

ஒரு நாள் நான்கு கட்டுக் கீரை வாங்கிக் கொண்டு அவர் நின்றிருக்கும்போது, ஓர் ஆண் அவரை அணுகி, ''இரண்டு கட்டு கொடும்மா'' என்று கேட்டுவிட்டார். அந்தம்மாவின் எளிமையான தோற்றத்தை வைத்து, கீரை விற்கும் பெண்மணி என நினைத்துவிட்டார்.

எளிமை என்பது வேறு; ஆனால் வளம் இருந்தும் ஏழை போலத் தோற்றம் தருவது பொருத்தமில்லை அல்லவா?

★ எல்லா மனுஷங்களுக்குள்ளேயும் ஓடற ஒரு 'கெத்து' இருக்கே, அதுக்கு ஏத்த மாதிரி டிரஸ் பண்ணிக்

கிறது நல்லது. ஒரு சில பெண்களுக்கு மாடர்ன் டிரஸ் பிடிக்காது; ஆனால் அவருடைய வீட்டுக்காரர் விரும்புகிறார் என்பதற்காக, நவீனமான ஆடைகளை அணிந்து செல்வார்கள். அப்போது அவர்கள் படுகின்ற அவஸ்தை இருக்கே...



★ நீங்கள் யாரோ, அதை உங்கள் ஆடைகள் பிரதிபலிக்கின்றன என்பதை மறக்க வேண்டாம். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ, அதை உங்கள் ஆடைகளே சொல்லிவிடும். அது, உங்கள் ஒட்டு மொத்த பர்ஸனாலிட்டியின் பிரதிபலிப்பு. எனவே, கண்டதை அணிந்து, கன்னாபின்னா தோற்றம் தந்து, கடுப்படிக்க வேண்டாம்.

★ உடை விஷயத்தில் எப்போதும் ட்ரெண்டியாக இருக்கும் டீனேஜ் கூட்டம்தான், படு கேஷுவலாகவும் இருக்கும். அது அந்த வயசுக்கே உரிய குணாதிசயம். அழுக்கு ஜீன்ஸ் (துவைத்துவிட்டால் அதன் பேர் ஜீன்ஸ் இல்லை; வீண்ஸ்!) சுருக்கம் விழுந்த சட்டை, என்று ஏனோதானோ என்றிருப்பவர்கள், இன்டர்வியூ என்று வந்துவிட்டால், உறுத்தாத உடைகளுடன் நீட்டாக வந்து நிற்பார்கள். கல்யாண நிகழ்ச்சி என்றால் சிரத்தையாக அலங்கரித்துக் கொள்வார்கள். உண்மையில் ஃபேஷன் உலகமே இந்த 'டீனேஜ் வோக்' பின்னால் தான் 'லோ லோ' என அலைந்து கொண்டிருக்கிறது.



ஏதோ ஒரு பழைய இந்திப்படம். அதில் ஓர் இளைஞன் இன்டர்வியூவுக்கு வருவான். அவனுடைய ஏனோதானோ தோற்றத்தைப் பார்த்துவிட்டு, நிராகரித்துவிடுவார்கள். மறு நாள் அதே இளைஞன், டிப்டாப்பாக வந்து நிற்பான். வேலையும் கிடைத்துவிடும். உடனே அந்த இளைஞன், "இது, முன்னாவோட சட்டை, இது பப்லுவோட பேண்ட். இது ராஜாவோட ஷூ. இதுக்குத்தான் நீங்க வேலை கொடுத்திருக்கீங்க." என்று ஒவ்வொன்றாகக் கழற்றி

எறிவான்!

உடைகளால் மட்டும் நமக்குப் பெருமையில்லை. ஆனால் ஏனோ இந்த உலகம், பழகிப் புரிந்து கொள்ளுமுன், ஆடைகளை வைத்தே ஒருவரை எடை போடுகிறது. அது நிச்சயம் சரியல்ல என்றாலும், அதன் பின்னால் இருக்கும் மனோதத்துவத்தைப் புரிந்து கொண்டு செயல்படுவதுதான் விவேகம்!



## யாருக்கு எது அழகு?

ஃபேஷன் என்பது பசிபிக் பெருங்கடல் மாதிரி. கரையோரமாக நின்று கால் நனைப்பது போல, ஒரு சில டிப்ஸ்களை மட்டும் தந்திருக்கிறேன். பிடிச்சதை எடுத்துக்குங்க!

## ஆண்களுக்கு...

முரட்டுப் பார்வை, முறையற்ற நடவடிக்கை ஆகியவற்றோடு, மட்டமான உடைகளும் ஒருவரைப் பற்றி தவறாக எடை போட வைக்கின்றன. வெள்ளையும் சொள்ளையுமாக இருப்பவர்களை டீஸண்ட் ஆசாமி என நினைக்கத் தோன்றும். (பெரும்பாலான அரசியல்வாதிகள் உஜாலாவுக்கு மாறிவிடுவது இந்த டீஸண்ட் லுக்குக்காகத்தான்) வெண்மை, வெளிர் க்ரீம், வெளிர் சந்தனம் போன்ற நிற ஆடைகள், அணிபவருக்கு உயர்ந்த மதிப்பைத் தரும். உள்ளூர ஓர் அமைதி வரும். ஆன்மிகவாதிகள் வெள்ளை உடை அணி

மினி கல்கி

வதும் தூய்மையின் சின்னம்தான்.

வெளிர் நிறங்களுக்கு அடுத்தபடியாக ஆண்களுக்குப் பிடித்த கலர் கறுப்புதான்! கறுப்பு, கவர்ச்சியின் நிறம். ஆழ்ந்த ரகசியங்களை பிரதிபலிக்கும் வண்ணம். ரஜினி, விஜயகாந்த், பார்த்திபன், முரளி போன்ற கோகோ கோலா நிற கதாநாயகர்கள் "கறுப்புதான் எனக்குப் பிடிச்ச கலரு" என்று உடுத்துவதன் ரகசியமும் இதுதான். கறுப்பு நிறம், மாநிறத்துக்குப் பொலிவூட்டும்.

நடுத்தர வயது உடைய ஆண்கள் அணிய, உறுத்தாத நிறங்களில், கோடு, கட்டம், புள்ளி என காஷுவல்ஸில் நிறைய இருக்கின்றன. பதின்மூன்றிலிருந்து இருபத்தைந்து வயது வரை உள்ள டீனேஜ் இளைஞர்கள், என்ன செய்தாலும் ஃபேஷன்தான். என்ன உடுத்தினாலும் ட்ரெண்டிதான். இருந்தாலும் கிளிப்பச்சை, மிட்டாய் ரோஸ், செர்ரி ரெட் போன்ற டமால் டுமீல் வண்ணங்களைத் தவிர்ப்பது நல்லது.



## குள்ளமான ஆண்கள்

இவர்கள் கட்டாயம் ஹீல்ஸ் வைத்த ஷூ அணிந்து, drainpipe pant அணிய வேண்டும். அரைக் கை ஓபன் நெக் சட்டைகளை மட்டுமே அணிய வேண்டும்.

## ஒல்லியான உயரமான ஆண்கள்

ப்ளெயின் சட்டை போட்டால் இன்னும் ஒல்லியாகத் தெரிவார்கள். பெரிய டிஸைன் போட்ட, ஃபுல் ஸ்லீவ்

மினி கல்கி

சட்டைகளை அணிய வேண்டும். காலர் குளோஸாக இருக்கணும். தோள்களில் ஃபிளாப் வைத்த சட்டைகள் அணிவதால், தடந்தோள்கள் இருப்பது போன்ற தோற்றம் ஏற்படும். பேகீஸ் பேண்ட் அணிந்ததும், குச்சிக் கால்கள் மறைந்து விடும்.



## குண்டான, வாட்டசாட்டமான ஆண்கள்

இலேசாக உடலைக் கவ்விப் பிடித்த மாதிரி டிரஸ் போடுவது நல்லது. பின்புறத்தை முழுவதும் மறைக்கும் ஷர்ட்டாக இல்லாமல், ஸ்லிட் ஓபன், சதுர நெக், ஷார்ட் ஷர்ட் போட்டால், கனத்த பின்புறம் மறைந்தும் மறையாமலும் தெரியும். முழுவதும் மறைத்து சட்டை போட்டால் 'டிக்கி'யின் பெரிய சைஸ் பயமுறுத்தும். ஃபுல் கை கூடாது. பெல்ஸ் பேண்ட் எல்லாம் உங்க ரேஞ்ச் இல்லை. நார்மல் பேண்டுக்கே வோட்டுப் போட்டு ஆதரிக்கவும்.



## வேஷ்டியும் ஜீன்ஸும்

எட்டு முழ வேட்டியும், கோணிப்பை ஜீன்ஸும்தான் என்றைக்கும் சிரஞ்சீவியாய் இருக்கும் ஆண்களின் ஆடைகள். Signature of the cool fashion icon. பூட் கட் ஜீன்ஸ், லோ ரைஸ், ஹை ரைஸ், பாகி, நேரோ பாட்டம் ஃபிட் ஜீன்ஸ், என ஏகப்பட்ட வெரைட்டி உள்ளன. அதிலேயே ப்ளீச்ட், ஃபேடட், பாட்ச் வர்க், ஸிப் ஸ்டிச் என 'அள்ளிக்கோ' ரகங்கள். 'இண்டிகோ, ரா ப்ளூ, டெனிம் ப்ளூ, டார்க் பிளாக் என கலர்க் கோலங்கள். துவைக்க வேணாம்; சலவை செய்ய வேணாம்... அப்படியே

போட்டுக்கலாம். ஹைய்யா! தமிழ்நாட்டின் தண்ணீர்ப் பஞ்சத்துக்கு ஏற்ற டிரஸ்!

## பெண்களுக்கு...

நாளுக்கு நாள் மாறிவரும் ஃபேஷன் உலகில், நிமிஷத்துக்கு நிமிஷம் புதிய மாடல் உதயமாகிறது. இன்றைய இளம் பெண்களின் அதீத ஆடை மோகத்தை எப்படித் தணிப்பது, என்றுதான் ஃபேஷன் டிஸைனர்கள் மண்டையை உடைத்துக் கொள் கிறார்கள்.

பெண்களே! நல்ல டெய்லரையோ அல்லது உயர் ரசனையுள்ள ஃபேஷன் டிஸைனரையோ கண்டு பிடிப்பதுதான் உங்களுடைய தலையாய வேலை. உங்கள் ரசனைக்கும் தோற்றத்துக்கும் ஏற்ற உடைகளைத் தைத்துக் கொடுப்பவர் அமைந்து விட்டால், அவருக்கு தெருக் கோடியில் சின்னதாகக் கோயில் வைத்து விடலாம்.



## பொதுவான டிப்ஸ்

இறுக்கமாக, மூச்சடைத்துப் போகும்படியாக உடைகள் அணியக் கூடாது. தொள தொள என்று துப்பட்டியைப் போர்த்திக் கொண்டது போல, மலையூர் மம்பட்டியான் ஸ்டைலும் நன்றன்று. நார்மல் ஃபிட்டிங், ஸ்லீக் கட்டிங், நீட் ஃபினிஷிங் கொண்ட உடைகளாக இருக்க வேண்டும். எம்பிராய்டரி, பீட் வர்க் டிஸைன்கள் அமைந்த சுரிதாராக இருந்தால், அவை நெஞ்சப் பகுதியில் இயற்கை

மினி கல்கி

யாகப் பதிந்து இருக்க வேண்டும்.

பருமனான பெண்கள் ஓபன் நெக், குட்டைக் கை சட்டை அணிய வேண்டும். ஒல்லியான பெண்களுக்கு பேக் ஓபன், முக்கால் கை அழகாக இருக்கும். பூசினாற் போன்ற பெண்களுக்கு பிரின்ஸஸ் கட், பேக் ஓபன் ப்ளவுஸ் கன கச்சிதமாக இருக்கும்.



தற்போது இளம் பெண்களின் சாய்ஸ் cap sleeve மற்றும் magyar (மாக்யார்) ஸ்லீவ்தான் (மேக்யார் ஸ்லீவ் என்பது தோள்பட்டையின் எக்ஸ்டன்ஷனாகத் துளியூண்டு நீட்டிக் கொண்டிருக்கும் பட்டாம்பூச்சி கையமைப்பு) இது தவிர, இருநூற்றுக்கும் மேற்பட்ட பிளவுஸ் டிஸைன்களை நாங்கள் தைக்கிறோம். 'போட் நெக்', 'ஸ்வீட் ஹார்ட் நெக்' 'பாக்கெட் நெக்' போன்ற சாதா டிஸைன்களிலிருந்து bow knot, rope knot, பத்திக் பட்டன்ஸ் என நெஞ்சை அள்ளும் டிஸைன்கள் உள்ளன. எனவே, ரவிக்கையோ, சுரிதாரோ தைக்கத் தரும்போது, ஸ்லீவ், நெக், டிஸைன் தேர்வை டிஸைனரிடம் விட்டு விடுங்கள். உங்கள் தோழி அணிகிறாள் என்பதற்காக நீங்கள் அணிய வேண்டிய கட்டாயமில்லை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று எடுப்பாக இருக்கும். டெய்லரின் ஆலோசனைப்படி நடப்பது, பல சமயங்களில் ஹிட் ஆகி விடும்.



## நைட்டியா? டேட்டியா?

பேர்தான் நைட்டி! ஆனால் பகல் முழுவதும் போட்டுக் கொள்கிறோமே! காற்றோட்டமான, மென்மையான, உறுத்தாத வெளிர் நிறங்களில், சின்னப் பூப் போட்ட நைட்டிகள் அணிவது அழகுக்கு அழகு சேர்க்கும். ஹாஸ்டல் போன்ற வெளியிடங்களில் தங்க நேரும்போது, நைட்டியை விட, நைட் சூட் பாதுகாப்பானது.

# கல்லூரி கலாட்டா

நாங்கள் கடை போடுவது, இந்தக் கல்லூரி கலா ரசிகைகளை நம்பித்தான். cap sleeves டீ ஷர்ட், டர்ன் அப் ஸ்ட்ரெச் ஷார்ட்ஸ், ஒன் ஷோல்டர் டீ ஷர்ட், கேப்ரிஸ் (முக்கால் பேண்ட்), க்ராப் பேண்ட், ஷிம்மர் ஸ்கர்ட், பூட்கட் ஜீன்ஸ், போலோபிக் (Polopique) போன்றவை டீனேஜ் பெண்களிடம் ஏகப்பட்ட மவுசு பெற்றவை.

சுரிதார், குர்தாவில் நூற்றுக்கும் அதிகமான ரகங்கள். எம்பிராய் டரி குர்தா, க்ரஷ் பீட் வர்க் குர்தா, ஸ்லப் காட்டன், பூட் லெக் பேண்ட்ஸ் வித் ஸ்லிட்ஸ், ரிங்கிள் குர்தா, ஹேண்ட்லூம் குர்தா என, பலதும் இளம் பெண்களால் ஆரவாரத்துடன் அணியப்படுகின்றன.



## லேட்டஸ்டா இருங்க!

ஒரு காலத்துலே டி.ஆர். ராஜகுமாரி போட்ட முக்கால் பேண்ட்டும், தொள தொள கையும்தான் இப்ப கேப்ரிஸாவும், ஃப்ளையிங் ஸ்லீவாகவும் உருமாறியிருக்கு. நடிகர் ரவிச்சந்திரன் போட்ட அந்தக் காலத்து பேண்ட் சட்டை, இன்றைக்கு flat front weft cord trouser, ட்வில் காலர் ஷர்ட் என்ற பெயரில் தூள் கிளப்பிக்கிட்டிருக்கு.

அதனாலே பழசுதான் புதுசு; புதுசுதான் பழசு. சீஸனுடைய கீ ட்ரெண்ட்

தெரிஞ்ச உடைகளை வாங்குங்க.

- ★ சந்தியா என்றதும் உடனே பச்சை சேலையும், சங்கர லிங்கம் என்றதும் நீலக் கலர் சட்டையும் நினைவுக்கு வந்தால் எவ்வளவு சலிப்பாக இருக்கும்! எனவே.. கொஞ்சம் மெனக்கெடுங்கள். சாலிட்ஸ், ஸ்ட்ரக்சர்ஸ், கட்டம், கோடு என்ற இந்த நான்கு விதங்களில், மிக்ஸ் அண்ட் மேச் செய்து அணியும் வித்தை கை கூடி வராமலா போய்விடும்!

- ★ காதல் வைரஸ் வந்தவங்கதான் அழகழகா டிரஸ் பண்ணிக்கிட்டு, ஜிகிடா ஜிகிடியாகத்தான் திகழணும்னு சட்டம் இல்லை. பொருத்தமா, அழகா, நீட்டா, சிம்பிளா, டிரஸ் பண்ணிக்கிட்டா, உங்களையும் எல்லாருக்கும் பிடிக்கும். உங்களுக்கும் எல்லாரையும் பிடிக்கும்.

எதுக்கு வளவளனு? பெண்களின் பெண்மையை அதிகப்படுத்தணும். ஆண்களின் ஆளுமையை அதிகப்படுத்தணும். அது மாதிரி டிரஸ் பண்ணத் தெரிஞ்சுக்கங்க!

(கிழிஞ்சுது போங்க! ஏற்கெனவே வீட்டுல துணிக்கடல் பொங்கி வழியுது. இதுலே புதுசு புதுசா டிப்ஸ் வேறே தர்றீங்களாக்கும்! உம்மை எல்லாம் 'குமரனி'ன் ஆறாவது மாடிக்குக் கூட்டிக்கிட்டுப் போய் குப்புறத் தள்ளி விடணும்!" போன்றதொரு வாசகர் கடிதத்தை எதிர்பார்க்கிறோம்!)

தொகுப்பு : **அனுராதா சேகர்**
கார்ட்டூன்ஸ் : **ஸ்யாம்**

---



# ஒற்றை ரோஜா

## அமரர் கல்கி

**ர**யில் என்னமோ வேகமாகத்தான் போய்க் கொண்டிருந்தது. ஆனால் என் மனது அதைவிட வேகமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பது கஷ்டமாயிருந்தது. அன்றைக்குப் பாருங்கள், என்ன காரணத்தினாலோ அந்த வண்டியில் கூட்டமே இல்லை. உயர்ந்த வகுப்பு வண்டிகள் வழக்கத்தைவிட அதிகமாகவே கோர்த்திருந்தார்கள் போலிருக்கிறது. நான் ஏறி இருந்த இரண்டாம் வகுப்பு வண்டியில் நான் ஒருவனேதான். ஆகையால் உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப் போய்விட்டது. ரயில் நின்ற ஒவ்வொரு நிலையத்திலும் வண்டியிலிருந்து கீழே இறங்கிப் பிளாட்பாரத்தில் சிறிது நேரம் உலாவிவிட்டு, ரயில் புறப்படும் சமயத்தில் மறுபடியும் ஏறிக் கொள்வேன். ரயில் நிலையங்களில் சாதாரணமாய் நடமாடும் பலதரப்பட்ட ஜனங்களைப் பார்ப்பதில் ஒருவித உற்சாகம் ஏற்பட்டது.

விருதுநகர் சந்திப்பில் அந்த உற்சாகம் சிகரத்தை அடைந்தது. ஆம்; முதலில் நான் பார்த்தது, - என் கண்ணையும் கவனத்தையும் கவர்ந்தது - ஓர் ஒற்றை ரோஜாப்பூதான்! அந்த ஒற்றை ரோஜாப்பூ ஒரு பெண்மணியின் எடுத்துக் கட்டிய கூந்தல்மீது வீற்றிருந்தது. 'கொலு வீற்றிருந்தது' என்றும் சொல்லலாம். அவ்வளவு இலட்சணமாயிருந்தது. தலை நிறைய ஒரு சுமைப் பூவைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு அலையும் சென்னை நகரப் பெண்மணிகள் பலரை நான் பார்த்திருக்கிறேன். "என்ன அநாகரிகம்? தலையில் புல்லுக் கட்டைச் சுமப்பது போல் சுமக்கிறார்களே?" என்று எண்ணியிருக்கிறேன். அதற்கெல்லாம் மாறாக, இவ்வளவு நாஸூக்காகவும் நாகரிகமாகவும் கூந்தலில் ஒற்றை ரோஜாப்பூ அணிந்திருக்கும் பெண்மணி யாரோ? - என்று அறிய ஆவல் உண்டாயிற்று. ரயிலில் நான் இருந்த வண்டிக்கு இரண்டு வண்டிக்கு அப்பால் அவள் இருந்தாள். அவள் தலை வெளியில் நீட்டப்பட்டிருந்தது. ஆனால் முகம் எனக்கு நேர் எதிர்ப்புறமாகத் திரும்பியிருந்தது. அந்தப் பெண்மணியின் முகம் எப்படியிருக்குமோ, கூந்தலில் சூடிய ஒற்றை ரோஜாப்பூவினால் ஏற்பட்ட நல்ல அபிப்பிராயம், முகத்தைப் பார்த்ததும் மாறிவிடுமோ என்ற ஐயத்துடனேயே அந்தப் பக்கம் போனேன். ஏதோ ஒரு கதையில் படித்திருக்கிறேன். ஒருவன் ஒரு பெண்ணின் கரத்தைப் பார்த்து அதன் அழகில் சொக்கிப் போனான்! அவள் முகத்தைப் பார்த்ததும் பயங்கரமும் அருவருப்பும் அடைந்தான். இம்மாதிரி கதி எனக்கும் ஏற்பட்டு விடுமோ?



அருகில் சென்றபோது சட்டென்று அவள் முகம் என் பக்கம் திரும்பியது. ஆகா! நான் பயந்தது என்ன முட்டாள்தனம். பார்க்கிறவர்களின் கண்களில் வந்து தாக்கி வேதனை உண்டாக்கும் சௌந்தரியமும் உண்டோ! அத்தகைய அபூர்வ சௌந்தர்யமுள்ள முகத்தை அவள் என் பக்கம் திருப்பினாள். ஒரு புன்னகையும் புரிந்தாள். நிலா வெளிச்சத்தில் முல்லை பளீரென்று மலர்ந்தது போலிருந்தது. நான் எப்பொழுதும் சங்கோஜமோ கூச்சமோ அதிகம் இல்லாதவன் தான். ஆயினும் அவளிடம் அப்போது நானாக ஒரு வார்த்தை பேச முயன்றிருந்தால் என் பிராணனே போயிருக்கும்.

**'ஒற்றை ரோஜா' - நெடுங்கதையின் ஒரு பகுதி**

மினி கல்கி


FREE!
A BLOW-UP POSTER WITH THIS ISSUE!
A HOLIDAY BONANZA! CRICKET SPECIAL
GOKULAM
The magazine for children
MAY 2004 Rs.8/-
BOOK YOUR COPY TODAY
For Subscriptions mail to : Gokulam, Kalki Buildings,
47 NP Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai-600 097
E-mail:subscription@kalkiweekly.com

# YOU CAN CHOOSE YOUR DOOR

## THAT IS YOUR RIGHT & RESPONSIBILITY

# MAYURAM TIMBER

Offers you wide variety of Doors at
Varying prices suiting your budget



## BE AWARE




Contact :

MAYURAM TIMBER & GENERAL TRADING CORPORATION

No.83 GST Road, West Tambaram, Chennai - 600 045.

Phone : 22415297 / 22381281

Registered with the Registrar of Newspaper of India ...
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka

